## இப்பதிப்பில் எடுத்துக் காட்டிய நூன்முதற் குறிப்பகராதி.

| | |
|---|---|
| அம | அமலனாதி பிரான் |
| இரண்டாந்திரு | இரண்டாந்திருவந்தாதி |
| இராமாநுஜ | இராமாநுஜ நூற்றந்தாதி |
| கண்ணி நுண் | கண்ணிநுண் சிறுத்தாம்பு |
| சிறிய திரும | சிறிய திருமடல் |
| தி.கு, திருக்குறுந் | திருக்குறுந்தாண்டகம் |
| திருச்சந் | திருச்சந்தவிருத்தம் |
| தி.நெ.திருநெடுந் | திருநெடுந்தாண்டகம் |
| திருப்பல். | திருப்பல்லாண்டு |
| திருப்பள்ளி | திருப்பள்ளியெழுச்சி |
| திருப்பா | திருப்பாவை |
| திருமா | திருமாலை |
| திருவாசி | திருவாசிரியம் |
| திருவாய் | திருவாய்மொழி |
| திருவிருத் | திருவிருத்தம் |
| திருவெழு | திருவெழுகூற்றிருக்கை |
| தே | தேவாரம் |
| நாச்சி, நாச்சியார் | நாச்சியார் திருமொழி |
| நான்முகன்திரு | நான்முகன் திருவந்தாதி |
| பெரிய திரும | பெரிய திருமடல் |
| பெரிய | பெரிய திருமொழி |
| பெரியதிருவந் | பெரிய திருவந்தாதி |
| பெரியாழ் | பெரியாழ்வார் திருமொழி |
| பெருமாள் | பெருமாள் திருமொழி |
| முதல்திரு மு.தி. | முதல் திருவந்தாதி |
| மூன்றாம்திருவந், மூ.தி | மூன்றாம் திருவந்தாதி. |

# முகவுரை

மனத்திலோர் தூய்மையில்லை வாயிலோர் இன்சொலில்லை
சினத்தினால் செற்றம் நோக்கித் தீவிளி விளிவீன்வாளா
புனத்துழாய் மாலையானே பொன்னிசூழ் திருவரங்கா
எனக்கினிக் கதி என்சொல்லாய் என்னையாளுடைய கோவே.

தொண்டரடிப்பொடியாழ்வார்.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு பக்தி வெள்ளம் தமிழகம் எங்கும் பெருகிப் புதியதொரு கிளர்ச்சியை எழுப்பியது. அக்காலத்தில் பக்தரும் முக்தரும் இறைவனது பக்தி வெள்ளத்தில் மூழ்கி ஆனந்தத்தினால் பல படியாகப் பாடியும் ஆடியும் எங்கும் சென்றனர். மதிநலஞ்சான்ற பெரியோர்கள் பலர் நாவினின்றும் பல தெய்வக்கவிகள், சிறப்பு மிக்க பாடல்கள் ஞானக்கலைகள் மலர்ந்தன. அவை அடியார்கள் அருளிய தேவார, திருவாசகம் முதலியனவும், ஆழ்வார்கள் அருளிய திவ்யப் பிரபந்தங்களுமாகும்.

ஆழ்வார்கள் அருளிய நாலாயிரத் திவ்யப் பிரபந்தம் வைணவர்களது தமிழ்வேதமாக விளங்குகிறது. இதில் வேதம், இதிகாசம், பாகவதம் முதலிய புராணங்கள் முதலியவற்றில் புதைந்து கிடக்கின்ற அர்த்த சாராம்சங்கள் பொதிந்து கிடக்கின்றன. முக்காலமும் உணர்ந்த முனிவர்கள் வாய்மொழிகளில் காணப்படும் சுவையின் சாராம்சங்கள் எல்லாம் திவ்யப் பிரபந்தங்களில் காணலாம்.

ஆழ்வார்களின் அருளிச் செயல்களைப் பெரியோர்கள் திவ்யப்பிரபந்தங்கள் என்னும் சிறப்புப் பெயரால் விசேடித்துக் கூறி வருகின்றார்கள். இந்நூல் ஏறத்தாழ நாலாயிரம் பாடல்களைக் கொண்டிருத்தலால் "நாலாயிரத்திவ்யப்பிரபந்தம்" என வழங்குகின்றது.

திவ்யப்பிரபந்தங்கள் வேதங்களுக்குச் சமமான சிறப்புடையன. நம்மாழ்வார் அருளிச் செய்த திருவிருத்தம். இருக்குவேதம். திருவாசிரியம் எசுர்வேதம், பெரிய திருவந்தாதி

அதர்வண வேதம்,' திருவாய்மொழி சாமவேதம் என்று பெரியோர்கள் கூறுகின்றார்கள்.

நாலாயிரத்திவ்யப் பிரபந்தம் மக்களுக்கு கூறுதிபயக்கக் கூடிய சிறந்த பொருள்களைக் கூறும் நூல்களுள் தலை சிறந்தது. சாத்விக குணக்கடவுளான திருமகள் கேள்வன்தான் இப்பிரபந்தத் தலைவன். திவ்யப்பிரப்ந்தம் படிப்போர் உள்ளத்தில் பக்தி யுணர்வைத் தோற்றுவிக்கிறது.

இயல், இசை நாடகம் என்னும் முத்தமிழுக்கும் திவ்யப் பிரபந்தம் சிறந்த நிலைக்களனாகத் திகழ்கிறது. நம்முன்னோர்கள் சுய சிந்தனை வருமுன்னரே சிறுவயதிலேயே நிலையான பொருளில் நாட்டத்தை இறைவனிடம் உள்ள நம்பிக்கையாகத் தெய்வபக்தியாகப் பழக்கிவிடுகின்றனர்.

இறைவனை வழிபடுத்துபவராக நம்பி எவர் வழிபடுகிறார்களோ அவர்களுக்கு இறைவன் துணையாக நின்று நல்வழியில் அழைத்துச் சென்று அடையவேண்டியதை அவர்கள் அடையச் செய்கிறான். நல்வழியில் செல்ல முற்படுவதும், துணைதேடுவதும், துணைவன் காட்டியபடி வழி நடப்பதும் சேரவேண்டிய இடத்தை அடைவதும், நம் முயற்சியாலும், உழைப்பாலும் நடைபெறுபவை. தீவிர முயற்சியும் உழைப்பும் இல்லாதவன் சேரவேண்டிய இடத்தை அடையமாட்டான். இதனை உணர்த்த எழுந்ததே கீழ்வரும் பிரார்த்தனை. "அஸதோ மா ஸத்கமய/ தமஸோ மா ஜோதிர் கமய/ மிருத்யோர் மா அம்ருதம் கமய/ என்பது. இந்தப் பிரார்த்தனையில் கமய அடையச் செய், அடைய உதவுவாய் என்றே வழிபாடு அமைந்துள்ளது. இப்படி வாழ்க்கையின் பல நிலைகளில் இறைவனை வழிகாட்டியாகவும், உற்ற துணையாகவும், பொறுப்பாளராகவும் கருதி அவருடன் இணையும் உணர்வு கொண்டவர்களையே அடியார்கள் எனப்போற்றி வணங்குகிறோம்.

இறைவனின் வழிபாட்டில் ஈடுபட்டிருப்பவர்க்கு அவரது அந்தர்யாமியின் குரல் எப்போதும் தெளிவாகக் கேட்கும். அதனால், அவர் அந்தர்யாமி காட்டிய வழியில் கெட்டதைத்

தவிர்த்து நற்செயல்களைச் செய்ய ஈடுபடுவார். விதிவசத்தால் ஏற்படும் சுகதுக்கங்களால் பாதிப்பை அடையாமல் தன் கடமைகளில் ஈடுபடுவார். சித்தசுத்தி நன்கு அமைந்து ஞான யோகத்திற்கு உரிமையுடையவராகச் செய்யும் ஞானயோகத்தால் ஈசுவரன் உலகம் இந்த இரண்டின் தத்துவத்தை உணர்ந்தவர்கள் அடியார்களாக ஆகின்றார்கள்.

இறைவனது வழிபாட்டில் பக்தி எனும் அன்பு மிகவும் துணைபுரிகிறது. பக்தியும் சிறுகச் சிறுக வளர்ந்து வலிவு பெறுகிறது. பக்தி வலிவு பெறவும், நிலைத்து இருக்கவும் இறைவனைப் பற்றிய அறிவு பெரிதும் துணைபுரிகிறது.

இறைவனின் நாமம் உலகிற்கு மங்களத்தைச் செய்வது. அது வெளிப்படும்போது நமது பாபங்கள் அனைத்தையும் போக்கி விடுகிறது. ஆதவன் உதித்தவுடன் கடல்போன்ற இருட்டைப் போக்குவது போல் என்கிறார் பகவந்நாமகௌமுதியில் லக்ஷ்மிதரர். அத்தகைய பெயர்களில் சில இறைவனின் குணச் சிறப்பைக் கூறுபவை. சில அவரது அருட்செயல்களைக் குறிக்கின்றன. அவற்றைக் கீர்த்தனம் செய்வது இறைவனின் அருளைப்பெற மிகச் சிறந்த வழியாகும்.

"கலௌ பக்தி:" என்ற வாக்கியத்தின்படி இறைவனிடத்தில் பக்தி செலுத்துவதுதான் சிறந்தது, அதிலும் பலர் ஒன்றுகூடி கூட்டுப் பிரார்த்தனை செய்வதின் மூலம் இறைவனின் அருளைப் பெறலாம். இடைவிடாது பக்தியுடன் செய்யப்பெறும் நாமசங்கீர்த்தனமே தியானம் வேள்வி, வழிபாடு என்ற மூன்று சிறந்த உபாயங்களின் சாதனமாகவும், அவற்றின் மாற்று உபாயமாகவும் ஆகின்றது என்பதை ஸஹஸ்ரநாம சுலோகங் களால் தெரிந்து கொள்ளலாம். ஆதிசங்கரர் வேள்வியைவிட நாம சங்கீர்த்தனம் சிறந்த உபாயம் என்று ஸஹஸ்ரநாம பாஷ்ய முன்னுரையில் கூறுகின்றார்.

இறைவனின் நாமாவை எந்த வேளையிலும் சொல்லலாம். தகுந்த வேளை, தகாதவேளை என்ற நியதி இல்லை. தூய்மை இல்லாதவனும் தூய்மை யுள்ளவனும் எந்நிலையில் இருப்பவனும் திருமாலை நினைத்தவுடன் உள்ளும் புறமும் தூய்மை பெற்றுவிடுகிறான். இறைவனை நினைக்கும் வேளையே

நல்லவேளை, நல்லநாள், நினைத்தவுடனே நட்சத்திர பலமும், நல்லராசியில் சந்திரன் சஞ்சரிக்கும் பலமும், அறிவோடு செய்யும் காரிய பலமும், தெய்வ அருளினால் ஏற்படும் பலமும் நிறைவேறுகின்றன.

"மானஸம் விஷ்ணு சிந்தனம்" என்ற சொற்றொடர் விஷ்ணுவின் நினைவே மனத்தால் செய்யப்பெறும் ஆத்ம சுத்தி தரும் ஸ்நானமாகும்.

இடைவிடாது இறைவனை நினைப்பவரது உள்ளத்தில் இறைவனின் வடிவம் அப்படியே பதிந்து நிலைத்துவிடும். ஆட்டிப் படைக்கும் மனம் தன்வசமிழந்து இறைவனின் வடிவமாகவே ஆகி அதில் நிலைத்து ஆனந்தமாக இருப்பதே பக்தியாகும். இந்த நிலைமையை முக்கிய பக்தி என்று கூறலாம். இந்த முக்கிய பக்தி நிலையைப் பெற உதவும் பயிற்சிகள் பல உண்டு. சாதனபக்தி, கௌணபக்தி என்று கூறுவர். மனம் இதன் வகைகளில் ஒன்றையோ, பலவற்றையோ கடைப்பிடித்து இறைவனிடம் தன்னை அர்ப்பணித்து நிற்கப் பழகும் முறையே சாதனபக்தி.

இந்தச் சாதனபக்தியானது ச்ரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம் தாஸ்யம்,சக்யம், ஆத்மநிவேதனம் என்று ஒன்பது வகை. (பாகவதம் 7 5 23.)

இறைவனிடம் இடைவிடாது ஏகாக்ரசித்தராய்ப்பக்தி செலுத்தி மோட்சத்தை அடைந்தவர்கள் ஆழ்வார்கள். இறைவனது எல்லையற்ற மங்கள குணங்களில் ஆழ்ந்து திளைத்து நின்ற அடியார்களை ஆழ்வார்கள் என்று பெரிதும் சிறப்பித்துப் போற்றப்படுகிறார்கள். இடைவிடாது திருமாலைப் போற்றிப்புகழ்ந்து பெரும்பேறு பெற்ற ஆழ்வார்கள் பன்னிருவர். அவர்களுடைய வரலாற்றினைச் சுருக்கமாகக் காண்போம்.

1. பொய்கையாழ்வார்: பாஞ்ச சன்னியாம்சம். இவர் காஞ்சி புரத்தில் உள்ள பொற்றாமரைப் பொய்கையில் அவதரித்தார். இவரது நட்சத்திரம் ஐப்பசித் திருவோணம். இவர் அருளிச் செய்த பிரபந்தம் முதல் திருவந்தாதி. நூறு பாடல்கள்.

2. பூதத்தாழ்வர்: கதாம்சம். அவதாரத்தலம் திருக்கடல் மல்லையில் மாதவிப்பூவில். ஐப்பசி அவிட்ட நட்சத்திரத்தில்

தோன்றினார். இவர் செய்த பிரபந்தம். இரண்டாம் திருவந்தாதி. நூறு பாடல்கள்

3. பேயாழ்வார்: இவரது அவதாரத்தலம் மயிலை ஆதிகேசவப் பெருமாள் கோயில் கிணற்றில் மலர்ந்த செவ்வல்லிப்பூவில். இவர் நந்தகாம்சம். இவரது நட்சத்திரம் ஐப்பசி சதயம். திருமாலின்பால் தாம் கொண்ட பேரன்பின் மிகுதியினால் காண்பவர்கள் இவர் பேய் பிடித்தவர் போலும் என்னும்படி இருந்ததினால் இவருக்குப் பேயாழ்வார் எனப் பெயரமைந்தது. இவர் செய்த பிரபந்தம் மூன்றாம் திருவந்தாதி. நூறு பாடல்கள் இவர்கள் மூவரும் யோனிஜரல்லர்.

4. திருமழிசையாழ்வார்: இவரது அவதாரம் மஹீஸார க்ஷேத்திரமாகிய திருமழிசை. இவரது தகப்பனார் பெயர் பார்க்கவரிஷி. தாயர் கனகாங்கி அம்மையார். தை மாதம் கிருஷ்ணபக்ஷ பிரதமை பானுவாரங்கூடின மக நட்சத்திரத்தில் தோன்றினார். இவர் சக்கராம்சம். இவர் செய்த பிரபந்தம் திருச்சந்த விருத்தம் 120 பாடல்கள்; நான்முகன் திருவந்தாதி 96 பாடல்கள்.

5. நம்மாழ்வார்: இவரது அவதாரத்தலம் திருவழுதி நாட்டில் தாமிரபரணி தீரத்தருகில் திருக்குருகூர் என்னும் திருப்பதி. இவர் கௌத்துபாம்சம், சேனேசராம்சம், பகவதாம்சம். இவரது தகப்பனார் பூவைசியராகிய காரியார். தாயார் உடைய நங்கை. வைகாசி மாதம் பௌர்ணமி வெள்ளிக்கிழமை விசாக நட்சத்திரத்தில் அவதரித்தார். வேதத்தை உலகிலுள்ள சீவாத்து மாக்கள் எல்லாம் பயின்று மேன்மையடைய வேதமாகிற பாற்கடலைப் பிரணவத்தால் கடைந்து சுவைமிக்க அமுத மயமாக்கி அந்த வேதத்தாத்பரியங்களைத் தமிழ்ப்பாசுரங்களாகத் தம் திருவாக்கினாலே அருளிச் செய்தது. திருவாய்மொழி 1101 பாடல்கள், திருவிருத்தம் 100, திருவாசிரியம் 7, பெரிய திருவந்தாதி 87. திராவிட வேதம் என்று சொல்லப்படுகிற திவ்வியப் பிரபந்தங்களை மதுரகவி ஆழ்வாருக்கு உபதேசித்தார்.

6. குலசேகராழ்வார்: மலையாள தேசத்தில் கொல்லி நகரம் என்ற திருவஞ்சைக் களத்தில் தோன்றினார். மாசி மாதம் சுக்ல பக்ஷம் துவாதசி, வெள்ளிக்கிழமை கூடின புனர்பூச நட்சத்திரத்தில் அவதாரம். இவர் கௌஸ்துபாம்சம். இவர் செய்த பிரபந்தம் பெருமாள் திருமொழி.105 பாடல்கள். முகுந்தமாலை என்னும் நூலைச் சம்ஸ்கிருத மொழியில் இயற்றியுள்ளார்.

7. பெரியாழ்வார்: இவரது அவதாரஸ்தலம் ஸ்ரீவில்லிபுத்தூர். இவர் பெயர் விஷ்ணுசித்தர். ஸ்ரீவைணவகுலத்தைச் சார்ந்தவர். முன்குடுமி அந்தணர். ஆனிமாதச்சுக்லபக்ஷ ஏகாதசி பானுவாரம் கூடின சுவாதி நட்சத்திரத்தில் அவதாரம். இவர் கருடாம்சம். இவர் இயற்றிய பிரபந்தம் திருப்பல்லாண்டு 12 பாடல்கள், பெரியாழ்வார் திருமொழி 461 பாடல்கள்.

8. தொண்டரடிப்பொடியாழ்வார்: இவர் அவதாரத்தலம் திருமண்டங்குடி, இவர்வனமாலாம்சம். மார்கழி மாதக் கிருஷ்ண பக்ஷத்துச் சதுர்த்தசி மங்களவாரம் கூடின கேட்டை நட்சத்திரத்தில் தோன்றினார். இவர் செய்த பிரபந்தம் திருப்பள்ளியெழுச்சி 10 பாடல்கள், திருமாலை 45 பாடல்கள். இவர் திருநாமம் விப்ர நாராயணர். இவர் அந்தணர்.

9. திருப்பாணாழ்வார்: இவர் நிசுளாபுரி என்கிற உறையூரில் அவதரித்தார். இவர் – ஸ்ரீவத்ஸாம்சம். கார்த்திகை மாத கிருஷ்ணபக்ஷ த்வீதியை புதன்கிழமை கூடின ரோகிணி நட்சத்திரத்தில் அவதரித்தார். இவர் செய்த பிரபந்தம் - அமலனாதி பிரான் 10 பாடல்கள் இவர் திருநாமம் பாண்பெருமாள், முனிவாகனர். இவர் நெற்கதிரில் அவதரித்தார்.

10. திருமங்கையாழ்வார்: இவர் திருவாலி திருநகரியில் திருக்குறையலூரில் அவதரித்தார். இவர் பூவைசியரில் அகமுடையார். கார்த்திகை மாதம் குருவாரம் கார்த்திகை நட்சத்திரத்தில் பிறந்தார். இவர் சார்ங்காம்சம். இவர் மனைவி குமுதவல்லி நாச்சியார் என்னும் தெய்வப் பெண். இவர் செய்த பிரபந்தம். பெரியதிருமொழி 1084பாடல்கள். திருக்குறுந்

தாண்டகம் 20 பாடல்கள், திருநெடுந்தாண்டகம் 30 பாடல்கள், திருவெழுகூற்றிருக்கை, பெரியதிருமடல், சிறிய திருமடல் ஆக மூன்றினில் பாசுரம் 227.

**11. ஆண்டாள்:** ஸ்ரீவில்லிபுத்தூரில் துளசிவனத்தில் அவதரித்தார். ஆடிமாதச் சுக்லபக்ஷ சதுர்த்தசி, செவ்வாய்க்கிழமை கூடின பூர நட்சத்திரத்தில் அவதரித்தார். இவள் பூமிப்பிராட்டி அம்சம். இவள் திருநாமம் சூடிக்கொடுத்த நாச்சியார் பெரியாழ்வார் இவரைத் தம்முடைய பெண்ணாக எடுத்து வளர்த்து அரங்கருக்குத் திருமணம் செய்து கொடுத்தார். இவர் இயற்றிய நூல்கள் திருப்பாவை 30 பாடல்கள், நாச்சியார் திருமொழி 143. பாடல்கள். பெரியாழ்வார் கனவிலே பெருமானால் தம்மகள் பெருமையறிந்து "பின்னை கொல் நிலமாமகள் கொல் திருமகள் கொல் பிறந்திட்டாள்" என்று விசேஷப் பிரதிபக்தி பண்ணினர்.

**12. மதுரகவி ஆழ்வார்:** இவர் பாண்டி நாட்டில் திருக்கோளூர் திருப்பதியில் அவதரித்தார். இவர் குமுதாம்சம், கருடாம்சம். சித்திரைமாதச் சுக்கில பட்சச் சதுர்த்தசி வெள்ளிக்கிழமை கூடிய சித்திரை நட்சத்திரத்தில் தோன்றினார். இவர் முன்குடுமி அந்தணர். இளமையிலேயே வேதம் முதலிய நூல்களையெல்லாம் ஓதி உணர்ந்து மதுரம் மிகுந்த இனிய சிறந்த கவிகளைப் பாடவல்லவராக இருந்ததினால் இவருக்கு மதுரகவிகள் என்னும் பெயர் ஏற்படலாயிற்று. நம்மாழ்வாரையே குருவாகக் கொண்டு வாழ்ந்து உய்ந்தவர். இவர் பாடியருளிய பிரபந்தம் "கண்ணி நுண் சிறுத்தாம்பு" என்னும் பிரபந்தம்.

"தோன்றின் புகழோடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று"

என்ற குறளுக்கு எடுத்துக் காட்டாக விளங்கியவர் டாக்டர் ஐயரவர்கள்.

ஐயரவர்கள் தம் வாழ்நாளில் பல சங்க நூல்களையும் பிரபந்தங்களையும் நன்கு ஆராய்ந்து ஓலைச்சுவடியிலிருந்து புத்தக

உருவில் பிழையின்றி வெளியிட்டுள்ளதைத் தமிழ் உலகம் நன்கு அறியும்.

நூற்பதிப்பு யாவரும் மகிழ்ந்து மேற்கொள்ளக் கூடிய செயலன்று. மரபுவழி வந்த இலக்கிய இலக்கண நூல் தேர்ச்சியும், நுண்ணிய கேள்வியும், பல சமய உணர்ச்சியும், பலகலைத் துறைகளிலும் பயிற்சியும், தெளிவும், நுண்மாண் நுழைபுலமும், இடையறா முயற்சியும், ஊக்கமும், நினைவாற்றலும் மிக உடையாரே மேற்கொள்ளத் தக்கதொன்றாம். மேலும் பழந்தமிழ்ச் செய்யுள் உருவத்தைத் தாம் தாம் விரும்பியபடி சிதையாமல், ஏட்டுச்சுவடிகளில் உள்ளபடி காக்கும் குறிக்கோளும், நூல் நூவல்பொருள்களாக யாவரும் உணர விரிக்கும் மனப்பாங்கும் நூற்பதிப்பாளர்க்கு இன்றியமையாதனவாகும். இவையெல்லாம் ஐயரவர்களிடத்தில் ஒருங்கு அமைந்து சிறந்தமை அவர்கள் பதிப்பித்துள்ள நூல்களை உற்று நோக்குபவர்களுக்கு நன்கு விளங்கும்.

பிற்கால இலக்கியங்களன்றிப் பழந்தமிழ்த் தொகை நூல்களும், இலக்கணங்களும், பெருங்காவியங்களும், பயில்வாரும், நுவல்வாருமின்றிப் பெயரளவால் கேட்கப்பட்டுச் சிதலுக்கு இரையாக நின்ற அக்காலத்தில், அவை அழிந்துபடாமல் ஊரூராகச் சென்று அவ்வேடுகளைத் தேடி எடுத்துக் கிட்டடத்தட்ட 64 ஆண்டுகளாக அவற்றை ஆராய்ந்து செப்பஞ்செய்து கற்பார்க்கு நன்கு விளங்கும்படி பலவகை ஆராய்ச்சிக் குறிப்புக்களுடன் ஓலைச் சுவடியிலிருந்து புத்தக உருவில் வழங்கிய பெருமை ஐயரவர்களையே சாரும் என்பதை அவர் பதிப்பித்துள்ள நூல்களிலிருந்து உள்ளங்கை நெல்லிக்கனி போல் நன்கு அறியலாம். ஐயரவர்கள் தம் வாழ்நாளில் நூறு நூல்களை வெளியிட்டுள்ளார்கள். பல நூல்களை வெளியிடுவதற்காக ஆராய்ந்து திருத்தி வைத்துள்ளார்கள்.

"பண்டிதா: சமதர்சிந:" என்ற கீதா வாக்கியத்தின்படி ஐயரவர்கள் சமயப்பக்காழ்ப்பின்றி நடுநிலைகொண்டு ஆராய்ந்து வெளியிட்டும், வெளியிடுவதற்கும் நூல்களைச் சோதித்து வைத்திருந்தார்கள். அவர்தம் வாழ் நாளில் தேவார அருஞ்சொல் அகராதியும், திவ்யப் பிரபந்த அகராதியும் மாணவர்களைக்

கொண்டு தாம் சொல்லி எழுதச் செய்து, பின்பு அவற்றைத்தாமே திருத்தி அருமையான சொற்களுக்குப் பொருளையும் குறித்து வைத்திருந்தவற்றுள் இப்பொழுது நூல் நிலையம் முதலில் திவ்யப் பிரபந்த அருஞ்சொல் அகராதியை அச்சிட்டுத் தமிழ் உலகிற்கு அளிக்கின்றது.

ஐயரவர்கள் சொற்களுக்கு அவர்காலத்துப் பதிப்பாகி இருந்த நூலைக் கொண்டு தொடர் எண் கொடுத்துள்ளார்கள். இந்நூலில் விளக்கமாக அறிந்து கொள்ள எந்தப் பத்து. எத்தனையாவது திருமொழி, எத்தனையாவது பாடலில் உள்ளது என்று கொடுத்திருக்கிறோம்.

அகராதியின் இறுதியில் நூற்றெட்டுத் திவ்ய க்ஷேத்திரங் களின் சுருக்கமும் சேர்க்கப்பட்டுள்ளது.

இந்நூலைப் பதிப்பிக்க வேண்டும் என்ற பேரவா கொண்டிருந்தவரும், ஸ்ரீஐயரவர்களின் பேரருமான திரு.க.சுப்பிர மணிய ஐயரவர்களின் நினைவுக்கு இப்பதிப்பை மிகுந்த அன்புடன் அர்ப்பணம் செய்கிறேன்.

இந்நூலை நல்லமுறையில் அச்சிட்டுக் கொடுத்த தி.சிடி.பிரின்டிங் நிறுவனத்தாருக்கு நன்றி.

பெசன்ட் நகர் -90.
15.4.1994.

**வித்துவான் க.பாலசாரநாதன்,**
ஆராய்ச்சித் துறை
டாக்டர் உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம்.

# திவ்யப் பிரபந்த அருஞ்சொல் அகராதி

அக்காக்காய் - சிறுபிள்ளைகளுக்குக் குழல் வாருவார் சீராட்டாகச் சொல்லும் பாசுரம். பெரியாழ். 2-5--1-10

அக்காணி - ஸ்தூல சரீரம், பெரியாழ். 5-2-3.

அக்காரம் - வெல்லம், அக்ஷாரம் பெரியாழ். 2-4-5.

அக்காரம் - கருப்புக்கட்டி, இக்குரஸம், (இக்குரஸம் - கரும்புச் சாறு) பெரியாழ். 2-9-7.

5 அக்காரக்கனியே - சருக்கரைக்கனியே. திருவாய். 2-9-8.

அக்காரவடிசில் - சர்க்கரைப் பொங்கல். நாச்சி. 9-6.

அக்கு - எலும்பு, உருத்திராக்கம். பெரிய. 9-6-1. தே 6.76.7 புத்தூர்.

அக்குவடம் - சங்குமணி மாலை. பெரியாழ். 1-7-2

அகடு - வயிறு, நடுவிடம். பெரிய. 1-2-1.

10 அகப்பணி - அந்தரங்க கைங்கரியம். திருவாய். 10-2-6.

அகம் - சித்தம். நெஞ்சு, இடம், பெரியாழ். 5-1-5: இரண்டாம் திரு.22.

அகம்படி - உள்ளிடம். பெரிய. 11-6-89. தே. 4-1-7,8 அதிகை 5-91-1 தனித்திருக் குறுந்தொகை

அகம்படியர் - அந்தரங்கர். திருப். வியாக். 4.

அகமகந்தோறும் - நின்ற இடங்கள் தோறும். திருவாய். 10-3-2 தே. 4-104-5. அதிகை.

15 அகமேனி - ஆத்மஸ்வரூபம். திருவாய். 9-7-10.

அகலம் - பரப்பு, மார்பு. மூன்றாம் திரு. தே. 1-43-3 கற்குடி.

அகலிடம் - பூமி. பெரிய 5-3-9.

அகலிலகலும் - திருவாய். 1-7-10

அகவலை - வலையின் உள்ளிடம். திருவாய். 6-2-9

20 அகவலைப்படுத்தல் - வசப்படுத்தல். திருவாய். 6-2-9.

அகாரியம் - செய்யத் தகாத்தொழில். பெரியாழ். 4-4-1.

அகைப்பு - மதிப்பு. நாச்சி. 38.

அங்கம் ஆறு - சிக்ஷை. வியாகரணம், சந்தசு, நிருத்தம், சோதிடம், கல்பம், திருமா.43. தே.1-65-9 புல்லவனீச்சரம்; 5-67-4 வாஞ்சியம்.

அங்காத்தல் - வாய்திறத்தல். பெரியாழ். 1-1-6.

25 அங்கி - அக்கினி. இராமாநுஜ 22, தே. சூரியன், 1-36-9. ஐயாறு.

அங்குத்தை - அங்கு உண்டாகும் செயல். பெரியாழ். 3-8-10; 4-1-3.

அங்குற்றேனல்லன் - அவ்விடத்தும் புகுந்தவனல்லேன். திருவாய், 5-7-2.

அங்கையில் வட்டு - உள்ளங்கையிலுள்ள கருப்புக்கட்டி. பெரிய. 10-9-3. வட்டு - கருப்புக்கட்டி.

அச்சன் - நாதன், சுவாமி. பெருமாள். 2-9 (மலை நாட்டுச் சொல்).

30 அச்சுதன் - அடியார்களை நழுவவிடாதவன், அழிவில்லாதவன். திருமா.2.

அச்சோ - அணைத்துக்கொள். பெரியாழ்.' 1-8-1. ஆச்சரியம். 'அச்சோ ஒருவரழகியவா. பெரிய. 9-2-1. அச்சோ. பத்து. திருவாசகம். திருவால. பொன்னனையாளுக்கு அருள்புரிந்த திருவிளையாடல். செய். 15,17.

அசும்பு - நீர்ப்பெருக்கு, சேறு, கல்மஷம். பெரியாழ். 5-4-8.

அசுரர் - தேவர்களுக்கு விரோதிகள். பிரமன் தொடையில் உதித்துப் பிரமனைப் பெண்ணாக நினைத்து விரும்பியமையால் அசுரர் ஆயினர். பெருமாள். 10-10.

அசோகின் இளந்தளிர் - அசோகமரத்தின் இளந்தளிர்கள். பெரிய. 3-5-1.

35 அஞ்சலோதி - ஐம்பால். அஞ்சு + அல் + ஓதி. சுருட்சி, நீட்சி, குளிர்ச்சி, அழகு, பரிமளம், என்ற ஐந்து வகையான தன்மைகளையுடைய கருமையான கூந்தல், பெரிய. 10-2-4.

அஞ்சனத்தினீறு - மையின் சுண்ணம். அஞ்சனம் - மை. சிறிய திரு. 10.

அட்டகில்லேன் - வார்க்கமாட்டேன். திருவாய் 4-7-9

அட்டல் - வார்த்தல், சமைத்தல். பெரியாழ். 3-5-1.

அட்டி - இட்டு. (போஜனம்) பெரியாழ். 1-6-5.

40 அட்டுக்குவி சோற்றுப்பருப்பதம் - சமைத்துக் குவிக்கப்பட்ட சோறாகிய மலை. பெரியாழ். 3-5-1.

அட்டைகள் - சுவைப்பர். திருவாய். 9-1-2.

அடம்பு - ஒருவகைக் கடம்பு. பெரிய. 6-7-9.

அடல் - வலிமை, போர், கொல்லல், சமைத்தல். முதல் திரு 71. தே. அடல், போர். 3-107-1 வலஞ்சுழி.

அடலாழி கொண்டான் மாட்டன்பு - பராக்கிரமம் பொருந்திய சக்கரத்தைக் கையிலே கொண்டுள்ள பெருமானிடத்தில் செலுத்திய அன்பு. முதல் திரு.71

45 அடிக்கண்ணி சூடிய மாறன் - திருவடிகளாகிற பூமாலையை முடிக்கு அணிந்த நம்மாழ்வார். திருவிருத்தம். 100. (மாறன்=உண்டியே

உடையே உகந்தோடும் உலகத்தாருடைய இயற்கைக்கு மாறு பட்டு "உண்ணும் சோறு பருகுநீர், தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்" என்று இருந்தனால் ஆழ்வார் மாறன் என்று திருநாமம் பெற்றார். என்பது அண்ணங்கராசாரி யார் சுவாமி உரை.)

அடிகள் - சுவாமி. திருவாய். 6-1-8.

அடிக்கொட்டிட - அடியைச் சேர நாச்சி. 4-1.

அடிச்சி - அடியவள். (வெள்ளாட்டி) சிறிய திரு.54.

அடிச்சியோம் தலைமிசை - உன் அடியவர்களாகிய எங்களுடைய தலையின் மேல். திருவாய். 10-3-5,6.

50 அடிதாறு - அடிக்கு அளவாக இருத்தல், பாதுகை, பாதரேகை, பெரிய திரு. 32.

அடிநிலை ஈந்தான் - திருப்பாதுகைகளை அளித்தவன். பெரியாழ். 3-9-6.

அடிநீறு - அடிப்பொடி. திருவாய். 5-9-2.

அடிநீறு கொண்டு - ஸ்ரீபாத தூளியைக் கொண்டு. பெரியாழ், 4-6-6.

அடியுறை - ஸ்ரீ பாத காணிக்கை. பெரியாழ். 4-3-9.

55 அடியேன் மனம் புகுந்ததேனே - அடியேனுடைய மனத்தில் புகுந்த தேன் போல் இனியவளே. பெரிய. 7-2-9.

அடிவீழ்ச்சி - அடியாட்டி, அடியாள். நாச்சி. 9-7.

அடுதல் - சமைத்தல், கொல்லுதல், வருத்துதல். திருவாய். 7-7-4,6., 8-1-1.

அடை - இலை. பெரியாழ். 2--3-1.

அடைக்காய் - வெற்றிலைப்பாக்கு, பெரியாழ். 2-3-1.

60 அடைபுடை - அகோராத்திரம். (இரவும் பகலும்) பெரிய. 4-10-3.

அண்டம் - அண்டகபாலம், மேலுலகம். திருவாய்.7-4-1.

அண்டர் - இடையர், நித்யசூரிகள், பெரியாழ், 1-1-5

அண்ணல் - பெருமையுடையவன். பெரியாழ். 4-10-6. தே. 1-49-9. நள்ளாறு.

அண்ணா - தலைவா. பெரிய. 1-9-6; 1-10-1. தே 4-62-1. ஆலவாய், 1-89-3 எருக்கத்தம்புலியூர்.

65 அண்ணிக்கும் - தித்திக்கும். கண்ணிநுண். 1. தே.6-54-3 புள்ளிருக்குவேளூர்; 6-52-2. வீழிமிழலை; 5-61-5. அரிசிற்கரை புத்தூர்.

அணங்காடு மிளந்தெய்வம் - தெய்வ ஆவேசங்கொண்டு ஆடுகின்ற அற்ப தெய்வம். திருவாய். 4-6-2.

அணங்கு - தெய்வமகள், வருத்தம். திருவாய்மொழி. 4-6-2. புறநா.52. சீவக. 162, 171, 353, 1473, 2444. முருகு. 289. சிலப். வேட்டுவவரி. அடி. 42, அகநா. 98. குறுந், 136, 204, 308.

அணர் - மோவாய்க்கட்டை. பெரியாழ். 3-6-2.

அணவி - அணைந்து. திருவாய். 592; பெரியாழ். 4-8-9.

70 அணார் - கழுத்து, கழுத்துக்கீழ் உறுப்பு. பெரியாழ். 3-5-8.

அணில் அணை கட்டியது - திருமா. 27.

அணுக்கர் - சமீபத்திலிருப்பவர். பெரியாழ். 5-4-11.

அணுக்கன் - அந்தரங்கன். பெரியாழ். 3-2-5.

அணை - படுக்கை. பெருமாள். 1-1.

75 அத்தன் - மிடுக்கன். பெரியாழ். 2-1-7.

அத்தாணிச்சேவகம் - பிரியாமல் நெருங்கிச் செய்யும் சேவை.. அருகான இடம், ஆஸ்தானம். திருப்பல். 8

அத்திரம் - அம்பு. பெரியாழ். 3--10-6.

அதக்கி - அடக்கி. பெரியாழ். 5-2-3.

அதகன் - பகைவரைக் கொல்லுவோன். பெரியாழ். 2-1-9.

80 அதர் - வழி. (புழுதி) பெரிய. 4-3-6.

அதவி - அடர்த்து. இரண்டாம் திரு. 89.

அதவுதல் - நெருக்குதல். இரண்டாம் திரு. 89.

அதள்- தோல். பெரிய. 9-6-1. தே. 4-22-5. கோயில்.

அந்தகன் - குருடன், இயமன். பெரிய. 2-3-7.

85 அந்தணர்களொரு மூவாயிரவர் - பெருமாள். 10-2. தே. 7-90-7 கோயில்.

அந்தணர்தஞ்சிந்தையான் - திருநெடுந். 14.. தே 6-1-1- கோயில்.

அந்தணன் தோட்டம்- அக்கினி ஹோத்திரியான அந்தணனுடைய தோட்டம். பெரிய. 10-9-9.

அந்தண்மை - பிராமணத் தன்மை. திருமா. 25.

அந்தது - அப்படிப்பட்ட பிராப்யவஸ்து. திருவாய். 10-10-3.

90 அந்தமிழின் இன்பப்பாவினை. பெருமாள். 1-4.

அந்தமில்பேரின்பம் - முடிவில்லாத பேரின்பம். திருவாய். 10-9-10. சிலப் வரந்தரு. அடி. 182, கீர்த்தித்திரு அகவல். 101.

அந்தரம் - இடையூறு, தாமதம், இடைவெளி. பெரியாழ். 1-5-6.
அந்தரி - துர்க்கை. நாச்சி. 6-3. சிலப் வேட்டுவவரி. 21.
புறஞ்சேரி. அடி.104.
அந்தாதியோராயிரத்துள். திருவாய். 5-3-11, 7-3-11.

95 அந்தாதியோராயிரம். திருவாய். 10-5-11.
அந்தி - மாலைப்பொழுது. பெரிய. 4-2-9; சந்தியாவந்தனம். முதல் திரு. 33. சிலப். அந்திமாலைச். அடி - 23. சந்தியாதேவி. சீவக.313.
அந்தி காலவன் - சந்திரன். பெரிய. 8-5-1.
அந்தி மூன்று - காலை, உச்சி, மாலை. பெரிய. 7-5-1.
அந்தியம் போது - சந்தியாகாலம் பெரிய. 2-8-1.

100 அந்நான்று - அக்காலம், அன்று. பெரிய. 6-5-7, நான்முகன். 16, பெரிய திரு. 52.
அநகன் - குற்றமற்றவன்.
அநங்கதேவா - காமதேவனே. நாச்சி. 11.
அநந்தன் - ஆதிசேஷன். பெருமாள். 1-1.
அநுராகம் - ஆசை. திருவாய். 8-8-8.

105 அப்பா - பெரிய. 1-9-5. தே. 6-95-1. பொது 3-4-7. ஆவடுதுறை.
அப்பில் - நீரில், நாச்சி .3.
அபிமான துங்கன் - அகங்காரத்தால் உயர்ந்தவன், பெரியாழ். 4-4-8. திருப்பல்.11.
அம்பரம் - ஆடை, ஆகாயம். திருப்.17, பெரியாழ். 3-6-6.
அம்பு - நீர். சீவக.2332.

110 அம்புதம் - மேகம். பெரிய. 2-8-3.
அம்புயம் - தாமரை. பெருமாள், 7-1.
அம்புலி - சந்திரன். பெரியாழ். 1-4-3.
அம்மணி - அரை. (இடுப்பு) பெரியாழ். 1-6-3.
அம்மமுண்ண - முலைப்பால் பருக. பெரியாழ். 2-2-1.

115 அம்மனைமார் - தாய்மார். நாச்சி. 33.
அம்மா - சுவாமியே. பெருமாள். 5-2.
அம்மா நின்பாதத்தருகு - ஸ்வாமி தங்களுடைய திருவடிகளின் சமீபத்தில். பெரியதிரு .7.
அமணர் - சைனர். பெரிய. 7-4-5.
அமம் சூழ்ந்து - வியாபித்து. மூன்றாம் திரு. 98.

120 அமரர்களதிபதி - தேவராசன், நித்திய சூரியர் தலைவன், திருவாய், 1-1-1

அமருலகு - தேவருலகு, பரமபதம். பெரியதிரு, 6.7.
அமுக்கி - நன்றாகப்பூசி. பெரியாழ். 1-6-5.
அமுதிலுமாற்றவினியன் - அமிர்தத்தைக் காட்டிலும் மிக்க இனியவன். திருவாய். 1-6-6.
அமை - மூங்கில்.

125 அயர்வில் அமரர்களாதிக் கொழுந்து - நித்ய சூரியகளுக்குக் காரணமான தலைவன். திருவாய். 1-7-4.
அயராப்பாய் - மறவாதிருக்கில் இரு. பெரிய திருவந். 83.
அயன்வாளி - பிரமாத்திரம்.
அயில் - வேல், கூர்மை.
அரக்க நில்லா - அரக்க - அடக்க, நாச்சி. 3-4.
அரக்கன் போல்வானை - மாவலியை. இரண்டாம் திரு. 52.
அரக்கிலச்சினை - அரக்குமுத்திரை. திருவிருத், 76.

130. அர்த்த பஞ்சகசம் - ஸ்வஸ்ரூபம், பரஸ்வரூபம், புருஷார்த்த ஸ்வரூபம், உபாய ஸ்வரூபம், உபாய விரோதி ஸ்வரூபம். திருவாய். தனி.
அரக்கர் - ராட்சஸர். பெரிய. 4-3-5.

135. அரக்கு வழித்தது - அரக்கு, செந்நிறம் வழித்தது. பூசியது. பெரியாழ், 2-6-2.
அரக்கும் - அழுத்தும். பெரிய. 2-7-3. தே. 2-75-8. சீகாழி.
அரங்கத்தம்மா - திருப்பள்ளி, 1-9.
அரங்குதல் - அழிதல். திருச்சந் 32,49.
அரசாணி - அரசங்கொம்பு. பெரியாழ். 3-8-3.

140. அரசிப்படுதி - அரசியின் தன்மை அடைகிறாய், கோபியா நின்றாய். பெரியாழ். 2-9-10.
அரட்டன் - தீம்பன், மிடுக்கன். பெரிய. 3-4-10. தே. அரட்டர் 5-7-5. ஆரூர், திருவிசைப்பா. 37.
அரட்டமுக்கி - சத்துருக்களை அமுங்கச் செய்வர். பெரிய. 3-4-10. தே. 5-100-10. ஆதிபுராணம்.
அரணம் - ரக்ஷகம், புகல். திருவாய், 9-1-4.
அரந்தை - துக்கம். எழுகூற்றிருக்கை. 12.

145 அரம்பா - தீம்பனே. பெரியாழ். 3-1-6.
அரம்பையர் - தேவமாதர். பெருமாள். 4-2.
அரவதண்டம் - யமதண்டனை. பெரியாழ். 4-5-3,9. திருப்புகழ். 19.

அரவப்பகையூர்தி - கருடனைவாகனமாக உடைய கண்ணன். பெரியாழ். 3-5-11.
அரவு - பாம்பு. பெரியாழ். 3-5-11, திருவாய். 2-1-6.
150 அரனே - உருத்திரனுடையதே. திருவாய். 2-5-2.
அரி - திருமால். திருவாய். 1-3-6.
அரிகுரல் - தழுதழுத்த குரல். பெரிய. 8-5-9.
அரிகுலம் - குரங்குக் கூட்டம். பெரிய. 1-2-2.
அரிசினம் - மிக்க கோபத்தினால். பெருமாள். 5-1.
155 அரியயனரன் - திருமால், பிரமன், சிவன். திருவாய். 1-3-6.
அருகல் - சமீபம், சுருங்கல், திருவாய். 1-9-2,3.
அருத்தி - ஆசை. திருப்பா. 25.
அருத்தித்தல் - பிரார்த்தித்தல். திருப்பா. 20. தே. 4-92-8. ஐயாறு, 7-47-8. பொது.
அருபொருளை - அரியபொருளை. நான்முகன்.3.
160 அருவித் தின்றிட - அலைத்துத்தின்ன. பெரிய. 7-7-1. தே. 7-16-1 கலய நல்லூர். (அருவ)
அருவிவேங்கடம் - அருவிகளையுடைய திருமலை. நான்முகன்.40
அரைத்தொடர் - அரைவடம். பெரியாழ். 1-3-4.
அல்குல் - அரை, நிதம்பம். திருப்பா - 11, பெருமாள். 9-7, பெரியாழ். 1-7-8. தே. -54-3. ஒத்தூர்.
அல்லல் - பாவம், துக்கம். நாச்சி. 13-10 சிவபுராணம் -91. சீவக. 343. திருவிசைப்பா. 6-10.
165 அல்லி - அகவிதழ். தாமரை, திருநெடுந் 12, பெருமாள் 2-10, திருவிசைப்பா 19-3. சீவக. 162, 355, 606, 1422.
அல்லிமாதர் - இலக்குமி. பெரிய 1-7-9. தே. 2-101-11. ஆரூர்.
அலக்கண் - துன்பம். பெரிய.
அலக்கழித்து - கிலேசப்படச்செய்து. பெரிய. 4-10-3. தே. 5-73-1, மங்கலக்குடி
170 அலகு - விதை. முதல்திரு. 49.
அலங்கெழுதடக்கை - அலம் - கலப்பை. பெரிய. 2-7-8.
அலம்பிவண்டு - (அலம்பி - கிண்டி) திருவாய். 9-9-10, திருவிசைப்பா. 22.2.
அலம்புதல் - அலையச்செய்தல். பெரியாழ். 4-2-1.
அலத்தல் - கிலேசப்படுதல், கதறிஅழுதல், பெரியாழ். 4-5-1.
175 அலந்தலை - கலக்கம். பெரியாழ். 3-7-1.
அலப்பாய் - அலமந்து. திருவாய். 5-8-4.
அலம் - கலப்பை பெரிய. 4-4-3.

அலமருதல் - சுழலுதல். திருவாய். 3-2-9. திருவிசைப்பா. 26-4,10.
அலர் - மலர். திருவாய். 6-10-10 மணிமேகலை. பக். 46.

180 அலர்மேல் மங்கை - திருமகள். திருவாய். 6-10-10.
அலவ்லை - கண்ணன். கூடார்த்தங்களைச் சொல்பவன் பெரியாழ். 2-1-2.
அலவலைமை - அற்பத்தனம், அலைச்சல் தன்மை, பெரியாழ். 435
அலவன் - ஆண்நண்டு, பெரிய. 6-7-7.
அலவை - வஞ்சகமுள்ளவள். பெரிய. 10-5-8.

185 அலவைப் பெண் - கெட்டவளான பூதனை. பெரிய. 10-5-8.
அலற்றி - வாய்விட்டுக்கூவி, திருவாய். 4-4-9, 5-5-11, 6-4-1,6-7-11.
அலற்றி - முறைகெடக்கூவி, கூப்பிட்டுநின்று, திருவாய் 8-3-1.
அலற்றிய - கூப்பிட்ட. திருவாய். 9-7-11.
அலற்றும் - கூப்பிடும். திருவாய் 4-9-2.

190 அலற்றுவதென் - கூப்பிடுவதனால் என்னபயன். திருவாய். 4-7-4.
அல்ற்றுவதே - துதிப்பதே, திருவாய். 3-5-9.
அலற்றுவன் - முறைமாறி அவன் குணங்களை வாயாலே சொல்லுவேன். திருவாய். 1-3-10-, கூவுகின்றேன். திருவாய். 1-5-7.
அலறி - கதறிக்கூப்பிட்டு. பெரியாழ். 3-5-3.
அலி - நபும்ஸகம். திருவாய். 2-5-10.

195 அலைப்பூணுண்ணும் - அலைப்புண்ணுதலை அனுபவிக்கும் அலைப்பூண் - அலைக்கப்படுகிற. திருவாய். 3-2-10.
அலோகம் - காணப்படாத உலகம். திருவாய். 2-9-6. சீவக, 3082.
அவத்தங்கள் - பொல்லாங்குகளான யுத்தங்கள், திருவாய். 10-3-9.
அவத்தம் - அபத்தம். (பொல்லாங்கு) திருவாய், 10-3-9, பெரிய. 2-5-2.
அவபிருதம் - யாகத்தின் முடிவில் செய்யும் மங்களஸ்நானம். பெரியாழ். 4-7-6, திருப்பள்ளி -4.

200 அவம் - வீண். நான்முகன் திரு. 19, திருவிசைப்பா, வீழிமிழலை - 6.
அவலம் - துன்பம். பெரிய. 2-7-7,
அவனியாள் - பூமிதேவி. பெரியாழ். 1-3-8.
அவா - ஆசை. திருவாய். 10-10-11.
அவி - அவிஸ். யாகங்களில் தேவர்களுக்குக் கொடுக்கப்படும் உணவு, நாச்சி. 1-5.

205 அவுணன் - ராட்சசன். பெரியாழ். 1-5-2. திருவிசைப்பா. கோயில். 27.3.
அவை - முதல் வேற்றுமைச் சொல்லுருபு. பெரியாழ். 4-8,10
அழக்காடி - பேய்ப்பெண். பூதனை. திருவாய், 2-10-9.

அழகியான் - அழகுடையவன். நான்முகன் திரு. 22.
அழகு - சௌந்தர்யம். பெரிய திரு 31.

210 அழல் - நெருப்பு. பெரியாழ். 4-7-3. பெரிய. 3-2-6, நாச்சி. 13-8.
அழலம்புகவூதி - அழலிற்புக, திருவாய். 4-8-8.
அழன் - பேய், பிணம், திருவாய், 2-10-9. தொல். எழுத். 354.
அழிப்பன் - சத்ருதுக்களை அழிப்பவனாகிய எம்பெருமான் பெரியாழ். 4-8-6.
அழுந்தூர் மேற்றிசை நின்ற அம்மானே. பெரிய. 7-6-1-10, சோழநாட்டில் மாயூரத்தை அடுத்துள்ளது. உபரிச்ரவசு என்னும் அரசன் தனது தபோ வலிமையினால் விமானத்துடன் ஆகாயத்தில் சஞ்சரிக்கும் தன்மையுடையவன், ஒரு சமயம் தேவர்களுக்கும் முனிவர்களுக்கும் நேர்ந்த விவாதத்தில் பட்ச பாதகமாக இவ்வரசன் தீர்ப்புச் சொன்னமையால் முனிவர்களால் சபிக்கப் பட்டுப் பூமியில் விழுகையில் அவனது தேர் அழுந்தப் பெற்ற இடமாதல் பற்றி இதற்கு அழுந்தூர் என்று பெயர் வந்தது. கம்பர் பிறந்த இடம். தேவாரப் பாடல் பெற்ற தலமுமாகும்.

215 அழுந்தை - பெரிய. 6-6-9. தே. 2-20-1-11 திருவழுந்தூர்.
அழும்புதல் - மிக நெருங்குதல். திருவாய். 1-7-9.
அள்ளல் - குழைசேறு, நெருக்கம், திருவிருத். 100.
அள்ளல் பயலை - அடர்த்தலையுடைய பசலை நிறம். திருவிருத் 12.
அள்ளியம் பொழில்வாய் - குளிர்ச்சி பொருந்திய அழகியு சோலைகளில். பெரிய. 4-10-7.

220 அளகைக்கோன் - குபேரன். பெரிய. 2-10-8.
அளம்பு - உபமானம். பெரிய. திரு, 24.
அளறு - சேறு. திருப்பா. 14 (வியாக்)
அளி - கிருபை, வண்டு. பெருமாள். 1-6.
அளியத்த மேகங்காள் - தயையையுடைய மேகங்களே.

225 அளியத்தாய் - அருமந்தநீ எல்லோராலும் கிருபை. பண்ணத்தக்க நீ. திருவாய். 2-1-9.
அளை - வங்கு. பெரிய. 1-2-5.
அற்கம் - அடக்கம். திருவாய். 6-5-4.
அற்புதன் - ஆச்சர்ய சேஷ்டிதங்களையுடையவன். திருவாய், 8-6-10.
அற்றம் - அறுதி. பெரியாழ். 5-2-6. பெரிய. 10-1-10.

230 அற்றேன் - வந்தடைந்தேன். பெரிய. 1-9-9.
அறஞ்சுவராகி நின்ற அரங்கனார் - தருமமே சுவராக நிற்கிற அரங்கனார். திருமா.6
அறவன் - தர்மஸ்வரூபி. திருவாய். 1-7-1.
அறிகண்டாய் - தெரிந்துகொள். பெரிய. திரு. 66.
அறுகால் - ஆறுகால்கள். பெரியாழ். 4-2-8.

235 அறுசுவை - கைப்பு, புளிப்பு, உவர்ப்பு, கார்ப்பு, தித்திப்பு, துவர்ப்பு. திருவாய். 4-1-7. சீவக.193. நச்.உரை. பெருங்.இலாவாண. கடிக்கம்பலை. 80. கட்டிலேற்றியது. 24. மணி. 28.116,241.
அறுதல் - சீரணித்தல். பெரியாழ். 1-4-6. (அறா)
அறுதி - முடிவு, வரை. பெரியாழ். 4-10-9.
அறுதொழில் - ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல். எழுகூற், அடி14. பெருங். 2.3.9. புறநா. 397.20.
அறை - பாறை. பெரிய. 2-5-5.

240 அறைகை - சொல்லுதல், அடித்தல், ஒலித்தல், திருப்பா. 16.
அறையிடுதல் - அறைகூவுதல். திருவிருத். 19
அறையோ - ஐயம். பெரியாழ். 3-5-8, முறையிடும் சொல். திருவிருத். 10.
அறையோ - முறையோ முறையோ. பெரியாழ். 3-5-5, திருவாய். 5-1-1.
அன்றிக் கொண்டு - சீறிக்கொண்டு, நான்முகன், 29.

245 அன்றில் - அன்றிற் பறவை. கிரவுஞ்சப்பறவை. பெரிய. 11-2-5 தே. 1-60-7 தோணிபுரம், ஆரூர். 2-50-1 ஆமாத்தூர்.
அன்றிற்கூடு - அன்றில் பறவையின் கூடு. பெரிய. 11-2-1.
அன்றிற்பேடைகாள் - திருவாய். 9-5-2,3.
அன்றுதல் - சீறுதல். திருவிருத். 18. பெரிய. 8.3-8.
அன்னமதாயிருந்து அறநூலுரைத்தது. பெரிய. 11-4-8.

250 அன்னமாய் மறையை வெளிப்படுத்த. திருநெடுந். 30.
அன்னவசம் செய்கை - உண்ட உணவிற்கு ஏற்ப இடம் வலங் கொள்ளுதல், தூங்குதல், திருவாய். 3-7-10.
அன்னன்ன - அப்படிப்பட்ட. திருவிருத். 29.
அனந்தல் - சோம்பல். திருப்.10.
அனன்றுண்ட நீர் - (இரும்பானது) பழுக்கக்காய்ச்சப் பெற்று உட்கொண்ட நீர். திருக்குறுந். 13.

255 அனுங்குதல் - நோவுபடுதல், வருந்துதல், நாச்சி. 14-2, பெரிய 7-8-3.
ஆக்கம் - செல்வம், பேறு, திருவாய். 9-1-2, 1-6-8. திருவாசகம். சிவ, 41.
ஆக்கை - சரீரம். நான்முகன். 93. திருவாசகம். திருஅண்டப்பகுதி. 137.
ஆகமவாதிகள். சைவர். இராமாநுஜ. 91.
ஆதரம் - அன்பு. திருமா. 16.

260 ஆதன்மையால் - ஆன தன்மையால், அதனால் ஆட்பட்டதனாலே. பெரிய. 2-4-8,9.
ஆதானும் - யாதானும். பெரியதிரு. 25, 59.
ஆதித்தியன் - சூரியன். திருப். 22.
ஆது - யாது, பெரிய 939 தே 6-20-9 நள்ளாறு.
ஆதும் - யாதும். நாச்சி. 11-3, பெரிய. 10-7-10, திருவாய். 3-4-10, 8-2-11.

265 ஆதுமில்காலம் - ஒன்றும் இல்லாத காலம். ஒரு துணையும் இல்லாத சம்சாராவஸ்தை. திருவாய். 3-4-4.
ஆதுமில்லை - யாதுமில்லை. பெரிய. 10-7-10. தே. 2-84-8. நனிபள்ளி.
ஆநிரை - பசுக்கூட்டம். பெரியாழ். 3-4-4.
ஆப்பங்கொழியவும் - சரீரம் ஒழியவும். நான்முகன். 93.
ஆப்பு - கட்டு. முதல்திரு. 75.

270 ஆப்புண்ட - யாப்புண்ட. பெரிய. 8-2-5.
ஆப்புண்டிருந்தவனே - கட்டுண்டிருந்தவனே. பெரிய. 5-6-1,9.
ஆம்பல் - இலைக்குழல். பெரிய. 9-5-8.
ஆம்பற்கழியும் - இலைக்குழலோசைக்கு அழிவாள். பெரிய. 5-6-10.
ஆமருவி - பசுக்களை விரும்பி. (மருவுதல் - விரும்புதல்) பெரிய. 5-6-10.

275 ஆமுகம் - (ஆ - ஐயோ). நாச்சி. 11-1.
ஆமைத்தாலி - ஆமைவடிவமாகச் செய்யப்பட்ட தாலி பெரியாழ். 1-7-2, 2-6-1.
ஆய்க்குலம் - இடைக்குலம், திருப். 28. திருவிருத். 61.
ஆய்ந்தேத்த வல்லார் - ஆராய்ந்து துதிக்க வல்லவர்கள். நாச்சி. 7-10.
ஆய்ப்பாலர் - இடைச்சியர்கள். பெரியாழ். 2-3-1.

280 ஆயப்பிள்ளை - கண்ணன். பெரியாழ். 3-4-9.
ஆயம் - தோழியர் கூட்டம், வேலைத்திறம். சிநேகம். திருவாய். 8-2-1.
ஆயர்குலம் - இடைக்குலம். பெரியாழ். 1-7-11,3-1-8, திருப்பா. 5.
ஆயர்கொழுந்து - கோபாலருக்குச் சிரோபூஷணம், நப்பின்னை. திருவாய். 5-6-11.
ஆயர்கொழுந்தே - இடைக்குலத்தலைவனே. பெரியாழ். 2-3-3.

285 ஆயர்பாடி - இடைச்சேரி. நாச்சி. 14-2; பெரியாழ். 2-2-5.
ஆயர்பாவை நப்பின்னை - இடைமகளான நப்பின்னை. பெரிய. 2-3-5.
ஆயிரம் பேருடையவாளன் - ஆயிரம் பெயர்களையுடைய பெருமான். பெரிய. 6-6-9.
ஆயிரவர் நலனேந்து திருவல்லவாழ் - ஆயிரம் பேர் தன்னுடைய கலியாண குணங்களைக் கொண்டாடும் படியாகத் திருவல்ல வாழில் எழுந்தருளியிருக்கின்றவன். திருவாய் 5-9-10. இத்திருப்பதி கொட்டாரக்கராவிலிருந்து 36 கல் தொலைவில் உள்ளது. நின்ற திருக்கோலம். நாச்சியார் செல்வத் திருக்கொழுந்து. கிழக்கு நோக்கிய சந்நிதி. பெருமான்கோலப்பிரான்.
ஆயோ - கிளி முதலிய பறவைகள் வந்து தானியங்களை அழிக்காதபடி அவற்றை வெருட்டுவதாக ஆயல் இடுகிற சொல். அதுவோ என்று வினவுகிறபடி. திருவிருத். 10. தே. 7-9-4. சீபருப்பதம். சூளாமணி . 1658.
ஆர்த்த - கட்டிய. முதல் திரு. 22. ஆரவாரம் செய்தல். பெரிய. 1-5-5.
ஆர்தல் - நிறைதல். திருப்பா. 1, சிறிய 69, திருவாய். 4-1-6.
ஆர்ப்பு - பேரொலி. ஸ்ரீவசனபூஷணம். சூ. 77.
ஆர்படுவான்நேமி - கூர்மை. மூன்றாம் திரு. 80.
ஆர்வம் அன்பு. பெரியாழ 4-5-3. இரண்டாம் திரு. 1. திருவிசைப்பா. 25-8.

295 ஆர்வினவிலும் - எப்படிப்பட்ட அன்பர்கள் கேட்டாலும், பெரியாழ். 4-5-3.
ஆரல் - ஒருவகை மீன். பெரிய. 5-1-5.
ஆராமம் - உபவனம் சிறிய திரு. 71.

ஆராமை - திருப்தி பெறாமை.
ஆராவமுதம் - தெவிட்டாத அமிர்தம். சிறிய. திரு. 7.

300 ஆராவமுது - திருக்குடந்தையில் எழுந்தருளியிருக்கின்ற எம்பெருமான். திருவாய். 5-8-1.
ஆராவமுதே - திருமலையில் எழுந்தருளியிக்கின்ற எம்பெருமானே. பெரிய. 1-10-3.
ஆரியன் - ஆசாரியன். உபதேசரத்தினமாலை. 64. சிவபுராணம். 64. கீர்த்தித்திரு அகவல். 22.
ஆல் - தண்ணீர். ஆலமரம். திருவாய். 9-10-1.
ஆலநிழலில் அறம் நால்வர்க்கு உரைத்து - ஓர் ஆலமரத்தின் நிழலில் நான்கு முனிவர்களுக்கு உபதேசித்தவன் ருத்திரன். நான்முகன் திரு. 17. (நான்கு முனிவர்கள்: அகத்தியர், புலத்தியர், தக்ஷர், மார்க்கண்டேயர்) என்று அண்ணங்கராசாரிய சுவாமிகள் உரை காண்கின்றார். நால்வர் என்பது சனகர், சனந்தனர், சனாதனர், சனத்குமாரர் இவர்களைத்தான் எல்லா நூல்களும், பாகவதமும் கூறுகின்றன. அப்படியிருக்க சுவாமிகள் கண்ட உரைக்கு ஆதாரம் யாதோ? திருச்சாழல். 16.
ஆலமரத்தின் சிறப்பு: நூறுயோஜனை தூரம் உயரம் உள்ளது எழுபத்தைந்து யோஜனை நீளமுள்ள கிளைகளை யுடையது. எங்கும் நிழலையுடையது. தாபமற்றது. உயர்ந்த யோகத்தின் ஸ்வரூபம். மோட்சமடைய விருப்பமுள்ள வர்களுக்கு ஆசிரயமுமானது.

305 ஆலி - சிறுதுளி. பெரிய. 11-1-8. 1-2-1.
ஆலித்தல் - ஆரவாரஞ்செய்தல். பெரியாழ். 3-4-7. திருவிசைப்பா. 29-9.
ஆலிநகர்க்கதிபதியே - திருவாலி நகர்க்கு தலைவனே. பெருமாள். 8-7. இத்திருப்பதி சோழ நாட்டில் சீகாழியிலிருந்து ஆறுகல் தொலைவில் உள்ளது. திருமகள் எம்பெருமானை ஆலிங்கனம் செய்தமையால் 'ஆலி' ஆயிற்று. இவ்வூருக்கு அருகிலுள்ள வேதராஜபுரத்தில் பங்குனி உத்திரத்தில் திருமங்கையாழ்வார் திருமாலை வழிபறித்த வேடுபறி உற்சவம் நடைபெறுகிறது. எம்பிரான் வயலாலி மணவாளன்.
ஆலிவளநாடன் - திருவாலி நாட்டிற்க்குத் தலைவன். பெரிய. 8-3-10.
ஆலிலை யன்னவசம் செய்யும் - ஆலிலையிலே தூங்குகின்ற திருவாய். 7-1-4; 4-2-1.

310 ஆலுதல் - ஆடுதல் கூவுதல், சப்தித்தல், பொருந்துதல்.
ஆவத்தனம் - ஆபத்துக்காலத்தில் உதவும் செல்வம்.
(ஆவத்தனம் - ஆபத்தனம்). பெரியாழ். 4-2-6.
ஆவர் - யாவர், பெரிய. 3-3-7.
ஆவலிப்பு - பலம், கர்வம். திருமா. 1
ஆவித்தல் - நெடுமூச்சுவிடுதல். கொட்டாவி கொள்ளுதல்.
பெரிய. 1-2-8. சீவக. 2426.

315 ஆழ்பொருள் - எளிதில் அறிய முடியாத பொருள்.
நான்முகன். 1.
ஆழ்தல் - மூழ்குதல். ஆழமாதல். பெரிய. 6-3-4,
திருவாய். 4-7-5. 4-1-6.
ஆழமோழை - மோழை - கீழ்த்திசையில் பெருகும் ஆறு.
பெரியாழ். 3-7-4.
ஆழாந்து - ஆழ்ந்து, ஈடுபட்டு, திருவாய். 2-1-8.
ஆழி - சக்கராயுதம், கடல், சூரியன், வட்டவடிவம்,
பெரிய. 5-7-8, திருவாய். 8-10-6. திருவிருத். 34.

320 ஆழியான் - ஆழ்ந்து தேறியவன். பெரியாழ். 1-9-7, திருவெம். 8.
ஆள் - ஆண்மகன், காலாள். முதல்திரு. 81.
ஆளம்வைத்தல் - ஆலாபித்தல், பெரியாழ். 4-8-6.
ஆளரி - நரசிங்கம். பெரியதிருமடல். 127.
ஆளி - சிங்கம். பெரிய. 7-3-4.

325 ஆற்றங்கரை மரம். பெரிய. 11-8-1. நீத்தல். விண்ணப்பம். 3.
ஆற்றல் - பராக்கிரமம். (கீர்த்தித்திருவகவல். 103.)
ஆறு - விதம். திருவாய். 5-10-6.
ஆறுசமயம் - சார்வாகம், பௌத்தம், க்ஷபணம், வைகம்,
சாங்கியம், பாசுபதம், திருவாய். 9-4-8. அண்டப்பகுதி, 79.
ஆறுபொதி சடை - கங்கையைத்தரித்த சடை. திருவெழுகூற். 20.

330 ஆன் - பசு. திருச்சந். 40. பெரியாழ். 2-7-1, திருவாய். 1-8-8.
ஆனாத - அழியாத. பெருமாள். 4-2.
ஆனாய் - ஆனையே. பெரிய. 1-9-2, தே. 3-55-7. வான்மியூர்.
ஆனாயன் - மாட்டிடையன். பெரிய. 5-5-3. திருவாய். 1-8-8.
ஆனாயனாகி - மாடுமேய்க்கும் இடைக்குலத்தவனாகி.
பெரிய. 11-5-4.

335 ஆனெய் - பசுவின் நெய். திருச்சந். 40
ஆனைச்சாத்தன் - பாரத்துவாசம், வலியன். திருப். 7.
இகல் - பகை, போர். திருவாய். 6-4-6.

இகுளாய் - தோழியாய். திருவாய். 6-3-9.
இங்குத்தை - இவ்விடத்திய. நாச்சி. 12-4.

340 இங்குத்தை நின்றுந்துரப்பன் - இவ்விடத்தினின்றும் உன்னை ஒட்டி விடுவேன். நாச்சி. 5-10.
இங்குற்றேனல்லேன் - இங்கு நிற்கமாட்டேன். (பிறரோடு பொருந்துகிறதில்லை என்று கூறினும் பொருந்தும்) திருவாய். 5-7-2.
இங்கே - இங்கு. நாச்சி. 14-1.
இசலி - இகலி. பெரிய. 3-9-3.
இசலுதல் - பேரொலிசெய்தல். ஈடு. 4-10.6.

345 இசித்தல் - இழுத்தல். பெரிய. 1-2-6.
இசை - இராகம், உடன்பாடு. திருவாய். 2-4-11. திருவண்டப்பகுதி . 35
இசைகாரர் - பாடுபவர். திருவாய். 1-5-6.
இட்டம் - இஷ்டம். விருப்பம், நாச்சி. 14-1, திருவாய். 1-8-8.
இட்டாதெய்வம் - இஷ்டமான தேவதை. திருவாய். 3-9-6.

350 இட்டிடை - சிறிய இடுப்பு. திருச்சந். 13, திருவெம்பாவை. 16.
இட்டீடு - பரிகாசச்சொல். திருப். 18. வியாக்.
இட்டீறு - களிப்புடன் செய்யும் விளையாட்டு. நாச்சி. 14-1.
இட்டு வெந்நீரைக் காய்ச்சுதல். பெரியாழ். 2-4-3. (உரை)
இடங்கை - இடக்கை. இரண்டாந்திரு. 71.

355 இடங்கொள்ளுதல் - வியாபித்தல். திருவாய். 5-2-4.
இடத்தல் - பிளத்தல். இரண்டாந்திரு. 94.
இடம் - வசிக்குமிடம். நான்முகன் திரு. 66.
இடம் பெறுதல் - இடம் பெற்றிருத்தல். திருவாய். 1-3-9.
இடமுடைமை - விசாலமானதாயிருத்தல். பெரிய. 11-5-3.

360 இடர் - துன்பம். பெரிய. 6-9-1.
இடராட்டியேன் - துன்பமுடையநான். திருவாய். 8-2-2.
இடவகை - வசிக்குமிடம். பெரியாழ். 5-4-10.
இடவணரை - இடத்தோளோடு சாய்த்து. பெரியாழ். 3-6-2.
இடவன் - மண்கட்டி, பெரியாழ். 3-5-5.

365 இடற - தட்டித் திரியும்படி. பெரியாழ். 3-2-6.
இடறி - கடந்து. திருவாய். 6-7-2. (தே) 6-27-1, 10. ஆரூர். திருவிசைப்பா. 26.6.
இடறுதல் - துன்புறுதல், திருவாய். 4-1-7.

இடறும் - சுழலானின்ற. திருவாய். 4-7-7.
இடிசேர் - இடியை. ஒத்த - திருவாய். 4-1-3.

370 இடித்தல் - தகர்த்தல். திருவிருத். 36.
இடிதல் - கட்டுக்குலைதல். திருவாய். 9-6-2.
இடுக்குண்ட - நெருக்குற்ற. பெரியதிருவந். 21.
இடுகை - கொடுக்கை. பெரிய. 1-6-5.
இடும்பை - துன்பம். பெரிய. 1-6-5.

375 இடைகழி - இடைக்கட்டு. முதல் திரு. 86.
இடையனெறிந்த மரமே யொத்திராமே- பெரிய. 11-8-6.
சீவக. 1914. பழமொழி. 314.
இடையில்லை - அவகாசமில்லை. திருவாய். 8-2-8, 9-5-5.
இடையுவா - பௌர்ணமி. நாச்சி. 7-3.
இடைவீடின்றி - இடைவிடாமல். திருவாய். 1-10-8, 2-9-4.

380 இண்டைக்குலம் - நெருங்குதலையுடைய கூட்டம். திருப்பல். 5.
இண்டைகொண்டு - பூமாலைகொண்டு. பெரியாழ். 3-2-10.
(தே.) 5-7-3. ஆரூர்.
இண்டைச்சடை முடியீசன் - மாலையையும், ஜடையையும்,
கிரீடத்தையும் உடைய உருத்திரன்.
திருவாய். 7-5-7. (தே). 5-6-9, ஆரூர்.
இணக்கம் - சகவாசம், பொருத்தம், திருவாய். 6-2.8.
இணர் - பூங்கொத்து. பெரிய திருவந். 29.

385 இணைந்து - கலந்து. திருவாய். 6-1-4.
இணைவனாம் - சமனாகியிருப்பான். திருவாய். 2-8-1.
இத்தனை - இவ்வளவு. திருவாய். 9-5-1.
இதணம் - பரண். பெரிய. 1-8-8.
இதழுக்குக்கமுகம்பழம். திருவாய். 8-9-6.

390 இது வென்னிது வென்னிது வென்னோ. (ஊடல்).
பெரிய. 10-8-1,9.
இந்தளூரீரே - பெரிய. 4-9-1,3,4,5,6,7,8,9,
இந்திரகோபம் - தம்பலப்பூச்சி, நாச்சி. 9-1.
இந்திர ஞாலங்கள் - பொய்யான வித்தைகள். திருவாய். 9-5-5.
இந்திரலோகம் - இந்திரனது உலகம். திருமா. -2.

395 இந்திரன் சிறுவன - அருச்சுனன். பெரிய. 2-3-6.
இந்து - சந்திரன். பெரிய. 4-2-9. திருப்பூவல்லி. 4.
இமம் - பனி. மூன்றாம் திரு. 98.

இமவந்தம் - இமயமலை. பெரியாழ். 4-7-4.
இமில் - கழுத்து. திருவிருத். 21.

400 இமையவர் - தேவர். பெரியாழ். 4-7-4.
இயக்கர் - யக்ஷர். திருப்பல். 9.
இயக்கு - துன்பம். திருச்சந்த. 120.
இயங்கல் - செல்லுதல். முதல்திரு. 8.
இயத்தல் - கடத்தல். திருவாய். 1-3-6.

405 இயந்த - இகந்த. திருவாய். 1-3-6.
இயல் - இலட்சணம். இராமாநுஜ. 6
இயல்வு - விரகு. முதல்திரு 12,13; இராமாநுஜ 26 திருவிருத் 24.
இரண்டத்தில் - இரண்டில். சிறியதிரும. 59.
இரண்டுதறுகண் இரண்டுதிருக்கண்கள். பெரிய. 11-4-4.

410 இரந்தார் - யாசிப்பவர். பெரிய. 1-9-3.
இரவியர் - சூரியர். திருப்பள். 6.
இராக்கதி - ராக்ஷஸி. பெரிய. 10-6-9.
இராகம் - இசைப்பாட்டு, ஆசை. திருவாய். 1-6-5.
இராவணாந்தகன் - இராவணனைக் கொன்றவன். பெரிய. 2-3-7.

415 இரிதல் - ஓடுதல். பெருமாள். 1-1
இரிய - ஆரவாரித்து. திருவாய். 5-2-3.
இரீஈ - இருத்தி. திருவாய். 2-7-9.
இருக்கு - வேதம். பெரியாழ். 5-1-6, திருவிருத். 64.
இருடீகேசன் - இந்திரியங்களையடக்கியாள்பவன்.
பெரியாழ். 5-4-5. திருவாய். 2-7-10, நாச்சி. 5-6,

420 இருந்தில் - கரி. பெரிய. 2-10-3.
இருபாடெரி கொள்ளியின் உள்ளெறும்பே போல் - பெரிய
11-8.4. திருவாசகம் நீந்தல் விண்ணப்பம். செய். 9,
சீவக. நாமகள் 243, தே 4-75-6.
இரும்பு நான்றுண்ட
நீர்போல். திருக்குறுந் 5.
இரும்புபோல் வலிய நெஞ்சம். திருமா. 17.
இரைதேரும் புதாவினங்காள். பெருநாரை. திருவாய். 6.8.9.

425 இல்லம் - வீடு. பெரியாழ். 3-8-1.
இல்லம் வெறியோடிற்று - வீடு வெறிச்சென்றிருக்கிறது.
இல்லறமல்லேல் துறவறமில் - நான்முகன். 72.
இல்லி - சிறுவழி. பெரியதிரும. 87.
இலக்கு - குறி. பெரிய திரும. 87

430 இலகுதல் - விளங்குதல். திருவாய். 8-8-1.
இலச்சினை - அடையாளம் , முத்திரை. பெரியாழ். 1-7-6.
இலட்டுவம் - லட்டு. பெரியாழ். 2-9-9,
இலிங்கியர் - இலிங்கப்பிரமாணவாதியரான அநுமானியர். திருவாய். 4-10-4.
இலைக்குடை நீழல் - இலையாகிற குடையின் நிழல். பெரிய. 9-1-5.

435 இலைக்குழலூதி - இலையினால் ஆகிய ஊது குழல். பெரிய. 10-7-6.
இலையம் - இலை. பரியாழ். 3-4.8-
இவரித்தல் - எதிர்த்தல். பெரிய. 8-8-9.
இவரித்து - ஏறி. பெரிய. 8.8.9.
இவள்பரமே - இவளிடம் உண்டாகக் கடவதோ. திருவிருத். 60.
இவையா - இவை இருக்கிறபடி பாராய். பெரியாழ். 2-3-2.

440 இழந்ததுகட்டே - லோக மரியாதையை இழந்தாள். திருவாய். 6-6-10.
இழந்தது கற்பே - தன்னுடையச் சாயே - காந்தி திருவாய். 6-6-7.
இழந்தது மாமை நிறமே - அழகிய நிறத்தை இழந்தாள். திருவாய். 6-6-2.

445 இழுக்காய்த்து - குற்றமாகியது. பெரிய. 4-9-4.
இழிசிய - எழுதப்பட்ட. பெரிய. 2-8-7.
இள்கி - வஞ்சித்து. பெரியாழ். 3-7-4.
இளக - இல்லையாக. பெரியதிருவந். 18.
இளங்கோ - பெருமாள். 9-2.

450 இளங்கோயில் - இரண்டாந்திரு. 54 தே. 6-70-5. க்ஷேத்திரக் கோவை.
இளநீர் குலை தாழ்கிடங்கின் கூடலூர். பெரிய 5-2-8.
இளம்படி - மிருதுஸ்வபாவம். பெரிய. 2-7-2.
இளைதே - பிள்ளைத்தனமே. திருவாய். 6-2-6.
இளமையாடும் - பால்யசேஷ்டைகளைச் செய்யும். பெரிய 11-2-2. சீவக. 2491.

455 இளையவரேசாமுன் - பெரிய. 1-3-2.
இளையாப்பாய் - தளராதொழிவாய் பெரிய திருவந் 23.
இற்றைப்பறை கொள்வான் - பிரயோசனம் திருப்பா. 29.
இறப்பு - மரணம், மோட்சம் திருவாய். 4-1-10.
இறவு - முடித்தல். பெரியாழ். 5-4-2.

460 இறுகல் - அழுந்தல் திருவாய். 4-1-10.
இறுத்தல் - செலுத்துதல் திருவாய். 5-2-8.
இறை - சிறிது, அரசன், கடவுள், கப்பம். பெரிய 5-10-4 திருவாசகம். திருச்சதகம். செய். 57.
இறைகளவை - சரீரங்களாகிய அவை. பெரிய. 5-10-4.
இறைஞ்சென் - மனனே. பெரிய. 11-4-1.

465 இறைநிலை - பரமாத்ம ஸ்வரூபம். திருவாய். தனியன். 1-1-5.
இறையான் - சிவன். பெரியாழ்வார். 518. முதல் திரு. 28.
இறையிறை யுருகும் வண்ணம் - கொஞ்சம், கொஞ்சம் திருமா. 17.
இறைவன் குறை யிரப்ப மார்பு வாசநீர் அளித்தான். பெரிய 6-9-9.
இன்பமாரி - இன்பத்தையுண்டாக்கும் மேகம்.

470 இன்மை - இல்லாமை.. திருவாய். 6-3-4.
இன்னாமை - துன்பம். திருக்குறள். 630.
இன்னாரினையார் - இவர் இப்படிப்பட்டவர். நாச்சி. 7-5.
இனமலரெட்டுமிட்டு - செங்கழுநீர், செண்பகம், இருவாட்சி, பாதிரி, புன்னை, குருக்கத்தி, கருமுகை, தாமரை அஷ்டவித புஷ்பம். ஆசார்ய ஹ்ருதயம். பெரிய. 1-2-7.
இனவேற்கண். திருவாய்மொழி. 5-6-6.

475 இனிதிரை - இனிதுதிரை கடைக்குறை. திரை இனிது - அலைகள் இனிதாக. திருமா. 18.
இனியெம்பரமே - பரம் - வசம். திருவாய். 6-2-4.
ஈசன் - சிவன். பெரிய. 2-10-1, நான்முகன்- திரு. 96. கீர்த்தித்திருவகவல். 25, திரு அண்டப்பகுதி, 46. திருவிசைப்பா. 4-1, 25-9. தே. 4-65-3. சாய்க்காடு.
ஈசிபோமின் - சீசீ போங்கள். பெரிய. 1-3-8.
ஈட்டம் - கூட்டம். பெருமாள். 2-1.

480 ஈட்டுதல் - திரளுதல், திருவிருத். 21.
ஈடுமெடுப்புமிலீசன் - குற்றம் பார்த்துத் தள்ளுகையும், குணம் பார்த்துக் கொள்ளுகையும் இல்லாத எம்பெருமான். திருவாய். 1-6-3.
ஈப்பாய் - ஈவாய். நான்முகன் திரு. 19.
ஈர்த்தல் - இழுத்தல். நாச்சி. 14.4. சிவபுராணம். 74.
ஈர்மை - அறுக்குந்தன்மை. திருவாய். 9-6-3.

485 ஈர்மை கொள்தேவர் - அன்புடைய தேவர்கள். 2-8-10.
ஈர்மைசெய்து - ஈடுபடுதல்செய்து. திருவாய். 9-6-3.

ஈரியாயிருப்பாள் - அன்புள்ளவளாய் இருப்பாள். திருவாய். 6-7-9.

ஈவிலாத தீவினைகள் - நாசமில்லாத தீவினைகள். திருவாய். 4-7-3.

ஈவு - நாசம். திருவாய். 4-7-3.

490 ஈளை - கோழை. பெரிய. 6-4-1. தே. 1-67-6, 2-100-8. கோவலூர்வீரட்டம்.

ஈளையேங்கி - கோழையாலே இளைத்து. பெரிய. 1-3-6.

ஈற்றுத்தாய் - பெற்றதாய். பெரிய. 3-9-2.

ஈன்துழாய் - போக்கியமான திருத்துழாய். பெரியதிரும. 60.

495 ஈன்துழாயானை - இனிய துளசிமாலையையுடைய திருமால். முதல்திருவந். 26.

ஈனமர் சாபம் - தன்மை பொருந்திய சாபம். பெரிய. 5-9-4.

உக்கம் - ஆலவட்டம். திருப்பா. 20.

உகட்டுண்டு - உகட்டு - உவட்டு, திருவாய். 3-5-4.

உகவை - சந்தோஷம். திருவாய். 6-2-8.

500 உகிர் - நகம். பெரிய. 10-9-8.

உகைத்தல் - உபேக்ஷித்தல். நான்முகன்திரு. 38.

உச்சிமணிச்சுட்டி - தலையிலே அணியத்தக்க ஒரு ஆபரணம். பெரியாழ். 1-3-8.

உட்கண் - ஞானக்கண். பெரியதிருவந். 28.

உட்கு - பெருமை, அச்சம்.

505 உடல் உள் அவிழ்ந்து - சரீரமும், மனமும் நெகிழ்ந்து. பெரியாழ். 3-6-1.

உடலையுள் - உடலுள். பெரிய. 10-1-5.

உடன் - ஒருங்கு. பெரிய. 11-2-10.

உடுக்கை - உடைத்தோல். திருவாய். 4-8-4.

உடைமணி - அரையில் கட்டிய மணிகள். பெரியாழ். 1-7-1.

510 உணங்கல் - உலர்தல். (புழுக்கப்பட்ட நெல்) திருவாய். 4-6-7.

உணர்வத்தொடு - ஞானத்தோடு. திருவாய். 4-1-10.

உத்தரவேதி - யாகசாலை. பெரியாழ். 1-9-6.

உத்தானம் - எடுத்தல். பெரியாழ். 1-8-1.

உதரம் - வயிறு. அம. 4.

515 உந்தி - கொப்புழ். பெரிய. 5-4-1.

உந்தி பறக்கை - மகளிர் குழாம் உந்தி விளையாட்டு ஆடுதல். பெரியாழ். 3.9-11.

உபகாரம் கொள்ளாது - உபகாரத்தைக் கொள்ள முயலாமல். (தொண்டுகள் செய்கையாகிற உதவியைப் பெறமுயலாமல்) பெரிய திருவந். 39.
உம்பர் - மேலிடம், தேவர். பெரிய. 7-8-10; திருவாய். 10-8-7. திருச்சதகம். 64,66.
உம்பர்கோன் - இந்திரன். பெரிய. 5-4-5.

520 உமர் - உம்மைச் சேர்ந்தவர். திருவாய். 8-1-4.
உய்வு - பிழைப்பு. திருவாய். 4-3-11.
உயர்த்துணவு - ஞானம். மூன்றாந்திருவந். 94.
உயிர்நிலை - சீவாத்ம ஸ்வரூபம். திருவாய். தனியன். 5.
உயிர்ப்பு - மூச்சு. நாச்சி. 5-2.

525 உயோகுதுயில் - யோகநித்திரை. எல்லாவற்றையும் அறிந்து கொண்டே தூங்குதல். பெரியாழ். 1-5-1.
உரப்புதல் - அதட்டுதல். சிறிய திரும. 37.
உரப்பாள் - அதட்டாள். நாச்சி. 3-9.
உரம் - பலம், மார்பு. திருவாய். 1-3-1.
உரவு - விஷம். திருவாய். 6-4-1.

530 உரு - ரூபம், தேகம். பெரிய. 1-4-2.
உருப்பன் - உருக்குமன். பெரியாழ். 4-3-1.
உருப்பிணி - உருக்குமிணி. பெரியாழ். 3-9-3, 4-3-1.
உருப்பொலிகை - தழும்பேறுதல். பெரியாழ். 5-4-7.
உருமகம் - நரமேத யாகம். பெரியாழ். 4-8-3.

535 உருவறை - அவலக்ஷணம். பெரியாழ். 3-8-2.
உருவெண்ணும் - கணக்கெண்ணும். முதல்திரு. 33.
உரைக்கியம் - சொல்லுவம். திருவிருத். 55.
உரோடம் - ரோஷம். பெரியாழ். 2-6-5. நாச்சி. 2-5.
உரோமகூபம் - மயிர்ச்சிலிர்ப்பு. பெரியாழ். 5-1-7.

540 உலக்க ஓதுவனே - எப்படி முடியச் சொல்லுவன். திருவாய். 3-1-5.
உலக்க - முடியக் கண்டு திருவாய். 8-3-10.
உலங்கு - பெரு நுளம்பு - பெருங்கொசுகு. நாச்சி. 8-6.
உலங்குண்ட விளங்கனி - பெருங்கொசுக்கள் உண்ட விளாம்பழம். நாச்சி. 8-6.
உலப்பு - வறட்சி, அழிவு. திருவாய். 6-10-1.

545 உலாகின்ற - கெண்டை - உலாவுகின்ற. திருவிருத். 75.
உலோபாய் - உலோபமற்றிரா நின்றாய். பெரியாழ். 2-7-6. (தே. 6-35-7. வெண்காடு)
உவணம் - கருடப்பட்சி. முதல்திரு. 22.

உவரி - கடல். நான்முகன். 56.
உவலை யாக்கை - அருவருப்பான உடம்பு. திருவாய். 1-5-8.
550 உவனியம் - உபநயனம். பெரிய. 5-8-7.
உழக்குண்டு - துன்பப்பட்டு. நாச்சி. 13-4.
உழலையென்பு - உழலைத்தடி கோத்தாற்போலேயிருக்கின்ற எலும்புகள். திருவாய் 5-8-11.
உழறா நெகிழ்ந்தாய் - கலங்கி. பெருமா. 6-8.
உழறியுண்ண - துகைத்து. பெரிய. 9-5-2.
555 உழறுதல் - துகைத்தல். கலங்குதல். பெருமாள். 6-8., திருவிருத். 58. (தே. 3-47-7. ஆலவாய். 'உழறுமேல்' தக்க. 32.
உழிதருதல் - அலைதல். திருநெடுந். 9, திருமா.1, திருச்சதகம்.8. (திருவாசகம். 5,7)
உழுவை - புலி. பெரியாழ். 1-7-6. (திருச்சதகம். 7. அச்சப்பத்து. 8.)
உழை - புள்ளிமான். பெரியாழ். 5-1-2.
உள்ளுதல் - நினைத்தல். திருமா. 84.
560 உற்றாரிலி - கண்டு கிட்டினாரில்லாத. திருவாய். 5-6-7.
உறகல் - உறங்கல், உறங்கவேண்டா. பெரியாழ். 5-2-9.
உறகுதல் - உறங்குதல். பெரியாழ் 5 - 2 - 9.
உறல் - ஸ்பரிசம். திருவாய். 3-6-6.
உறிகள் போல் மெய் நரம்பெழுந்து - உடலிலுள்ள நரம்பகள் உறிகளைப் போல வெளியே தெரியும்படி. பெரிய. 1-3-3.
565 உறுகை - கிட்டுகை, சேருகை, திருவாய். 4-9-10.
உறுவது - உற்றது. திருவாய். 4-10-6.
உறைக்கும் - பொல்லாதாய் முடியும். நாச்சி. 2-9.
உறைப்பன் - மிடுக்கன். பெரியாழ். 4-8-2.
உன்மத்தர் - பைத்தியம் பிடித்தவர், பெருமாள். 3-4.
570 உன்னி - நினைத்தற்குரியவன். பெரிய. 10-1-3.
உன்னித்து - நினைத்து, அனுசந்தித்து. திருவாய். 4-6-9.
உன்னுடைய சுண்டாயம் நானறிவன் - உன்னுடைய வஞ்சகத்தை நான் அறிவேன். திருவாய் 6-2-11
சுண்டாயம் - விளையாட்டு. திருவாய். 7-8-7.
உன்னை என்னுள்ளே குழைத்தாய் - என்னோடு ஒன்றாகக் கலந்தாய். திருவாய். 2-6-9.
உனக்கேயறக் கொட்டு - உனக்கென்றேயற்றொழிய. திருவாய். 7-8-5.
575 ஊக்கம் - முயற்சி, உயர்ச்சி, மிடுக்கு, பெரிய. 10-9-1.
ஊட்டம் - உணவு, நாச்சி. 1-9. (திருவாசகம்) திருச்சாழல். 14.

ஊட்ட முதல் இலேன் - தினந்தோறும் ஊட்டி வளர்க்கத்தக்க கைப்பொருள் என்னிடம் இல்லை. பெரியாழ். 3-3-8.
ஊடல் - பிரண்யகலகம். நாச்சி. 4-11.
ஊடாடுதல் - நடுவேதிரிதல். திருவாய். 1-4-9.

580 ஊத்தை - அசுத்தம். பெரியாழ். 4-6-10.
ஊத்தைவாய் - அசுத்தமானவாய். பெரியாழ். 4-4-3.
தே 2.38.10 சாய்க்காடு.
ஊமனார் கண்ட கனவினும் பழுதாய். பெரிய 1 - 1 - 3.
ஊர்தல் - நடத்தல். பரவுதல், ஒழுகுதல். திருநெடுந். 23.
ஊரவர் கவ்வை - ஊராருடைய ஆரவாரம். திருவாய். 5-3-1,2,3,4.

585 ஊரவர் கவ்வை எருவிட்டு - ஊரார் கூறும் பழியாகிற எருவை இட்டு. திருவாய். 5-3-4.
ஊரா - ஊர்ப்பசு. திருவிருத். 94.
ஊராமிலைக்க - ஊர்வந்து சேர்ந்த கண்தெரிந்த பசுக்கள் கனைக்க. திருவிருத். 94.
ஊழ் - முறை, விதி.
ஊழ்த்தல் - கனிதல். பெரிய.

590 ஊழ்மை - முறைமை. திருவாய். 4-6-9.
ஊழி - கல்பம், பெரிய. 8-5-6. திருவாய். 5-4-8 திருஅண்டப்பகுதி. 9.
ஊழி - விலக்ஷண காலம். திருவாய். 2-1-4, 5. பெரிய. 1-4-9. திருப்பா. 4.
ஊழிலை - முற்றிப்பழுத்து விழுந்த இலை. சருகு.
ஊளியெழ - சப்தம் எழ. திருவாய். 7-4-4.

595 ஊற்றம் - உறுதி. அனுசந்தானம். திருப்பா. 21.
ஊறல் - ஊறிவந்த ஸாரம், நாச்சி. 10-9.
ஊறு - தீமை. திருவாய். 7-4-2.
ஊன் - மாமிசும். பெருமா. 41. பெரிய. 1-4-2.
ஊனகாரகர் - பிறரைக்கொண்டு தீமை செய்பவர். திருமா. 41.

600 ஊனக்குரம்பை - மாமிசதேகம். முதல்திரு. 91.
ஊனில்வாழ் உயிரே - மாம்சரூபமான சரீரத்தில் வாழ்கின்ற நெஞ்சமே. திருவாய். 231.
எஃகு - எஃகினாற் செய்த சூலம். பெரியதிரும. 94.
எக்கல் - மேடு. திருவாய். 4-1-4.
எக்கே - இது என்ன கஷ்டமோ. பெரிய. 10-8-8.

605 எக்கம் - ஒரு தந்தியையுடைய வாத்தியம், தாளம். பெரியாழ். 3-4-1.
எங்கள் குடிமுழுது - எங்களுடைய குடியிலுள்ளார் எல்லாரையும். பெரியாழ். 3-4-1.
எட்டினோடிரண்டு - பத்து, திருச்சந்த. 83. திருச்சதகம். 49.
எடுப்பு - உயர்வு. திருவாய். 1-6-3. ஈடு 8-1-3.
எடுவிய - எடுத்த. பெரிய. 8-7-3.

610 எண் கண்ணான் - பிரமன். நான்முகன்திரு. 73.
எண்கு - கரடி. பெரிய. 6-10-6.
எண்டிசை - எட்டுத்திக்கு. பெரியாழ். 2-9-11.
எண்டோளினாள் - துர்க்கை. பெரிய. 2-10-6.
எண்டோளீசற்கு எழின்மாடமெழுபது செய்து உலகாண்டவன் - கோச்செங்ணான். பெரிய். 6-6-8.

615 எதிர்தல் - ஒப்பாதல். நான்முகன். திரு. 84.
எந்தாதை தாதையப்பால் எழுவர் பழவடிமை - பத்துத் தலைமுறை. பெரிய. 7-2-6.
எந்தை - என் சுவாமி. பெரிய. 2-3-5. (சிவபுராணம். அடி. 11.)
எந்தை தந்தை தந்தை தந்தை தந்தைக்கும் முந்தை - நமக்கே உற்பத்திப் பரம்பரையில் முதல்வனான சம்பந்தத்தையுடையவன். திருவாய். 3-3-2.
எந்தை தந்தை தம்பெருமான் - குலநாதனான பெருமான். பெரிய. 2-2-4, 2-3-5.

620 எந்தை தந்தை தம்மானென்று - எம்முடைய குலநாதனென்று. பெரிய. 4-9-9.
எம்பரத்தல்லார் -- என்னைப்போலே அடிமை செய்யார். பெருமாள். 3-6. (தே) 7-100-4, நொடித்தான்மலை. 6-95-8 பொது
எம்பிராக்கள் - எம்பிரான். பெரிய. 10-5-2.
எம்மனா - எமது குல தெய்வமே. பெரியாழ். 5-4-3.
எம்மாவீடு - எமக்காகத் தருகிற விலக்ஷணமான மோட்சம்.

625 எம்மையுடைமாடு கொண்டான் - எனது ஆடை செல்வம் எல்லாம் கொண்டான். நாச்சி. 10-7.
எம்மோய் - எனதுதாய். பெருமாள். 7-6.
எய்க்கை - இளைக்கை. திருவாய். 8-8-7. பெரிய. 1-3-6.
எய்த்தாது - போராதொழிவது. பெரிய. 11-3-6.
எய்ப்பினில் வைப்பு - தளர்ந்த காலத்தில் உதவும் செல்வம். பெரிய. 7-10-4. நீத்தல் விண்ணப்பம். 39.

வெள்ளறை - வெண்மையான பாறைகளால் இயன்றமலை. (சுவேதாத்ரி எனப்படும்) சிறிய திரும. 70, பெரியாழ். 1 - 5 - 8, 2 - 8 - 4, 5 பெரிய திரும - 117.

வெள்ளித்தலை - வெள்ளித்தண்டு. பெரியாழ் - 1 - 2 - 3.

வெள்ளிப் பெருமலை - பெரிய வெள்ளிமலை. பெரியாழ். 1 - 7 - 5.

3185 வெள்ளியார் - சுக்கிரன். பெரிய. 4 - 10 - 7, 9 - 7 - 9.

வெள்ளியெழுந்து - சுக்கிரன் உதயமாகி. திருப்பா. 13.

வெள்ளுயிராக்குதல் - சாத்துவிக்னாக ஆக்குதல். திருப்பல். 8.

வெள்ளெனல் - வெளுத்தல். திருப்பா - 8.

வெள்ளேறன் - வெண்மையான ரிஷபத்தையுடைய உருத்திரன். திருவாய். 2 - 2 - 10.

3190 வெள்ளை நுண்மணல் - வெண்மையான நுட்பமான மணல். நாச்சியார் - 1 - 2.

வெள்ளை விளி சங்கு- வெண்மையானதும், எல்லோரையும் அழைப்பதுமாகிய சங்கு. திருப்பா - 6. பெரியாழ். 4 - 1 - 7.

வெளிய நீறு - அஞ்சன சூர்ணம். திருவாய் - 4 - 5 - 6.

வெற்பு சம்பந்தமான திருமால் செயல். திருச்சந். 39.

வெறி - வெறியாட்டு. திருவாய் - 4 - 6 - 11, திருவிருத் - 20.

3195 வெறியோடிற்று - வெறிச்சென்று இருக்கிறது. பெரியாழ். 3 - 8 - 1, திருவாய். 4 - 6 - 1, 10.

வேகவதி - காஞ்சிபுரத்தில் முன்னாளில் ஓடிய ஓர் ஆறு. நான்முகன் செய்த வேள்வியை அழிக்கவர நான்முகன் திருமாலைக் கொண்டு அடக்கினான். பெரிய திரும - 52 - 55.

வேங்கடத்தான் - திருமலலையில் எழுந்தருளியிருப்பவன். இரண்டாந்திரு . 28,45, மூன்றாந்திரு. 39,40.

வேங்கடநாடர் - திருமலையை நாடியவர். நாச்சியார். 10 - 5.

3200 வேங்கடம் - நாச்சியார். 8 - 4 - 2, 10 - 8, பெரிய - 1 - 10-1 - 10, 2 - 1 - 1 - 10, 5 - 5 - 1, 7 - 3 - 5, 8 - 2 - 3, 9 - 7 - 4, முதல்திரு 26,99, இரண்டாந்திரு - 46,53, மூன்றாம்திரு. 14,26,30,32,45,59,61,62,68,69, திருச்சந் 60-81.திருவிருத். 60,81, பெரிய திரும. 124.

வேங்கடமலை - பெரிய. 4 - 3 - 8.

வேங்கடவன் - இரண்டாந்திரு - 72, நாச்சியார். 1 - 1.

வேங்கடவாணன் - திருவேங்கடமலையில் இருப்பவன். பெரியாழ். 1 - 4 - 3, 1 - 8 - 8, 2 - 6 - 9,

3205 வேங்கடவேதியன் - வேங்கடமலையிலுள்ள ஸ்ரீனிவாசன். பெரிய - 9 - 9 - 9.

வேங்கை கழுத்திற் சொரிபீ உறங்கல். பெரியாழ் - 3 - 5 - 8.

வேட்டத்தைக் கருதாது - ஆசைப் பெருக்கத்தைக் கருதாமல். பெரிய - 10 - 9 - 10.

வேடர் தெழிப்பு - வேடர்களின் ஆரவாரம். பெரிய - 1 - 7 - 2.

வேடர் மறக்குலத்தவரின் மணவகை. பெரியாழ். 3 - 8 - 6.

3210 வேடார் திருவேங்கடம் - வேடர்கள் நிறைந்த திருமலை. பெரிய - 4 - 7 - 5.

வேடுமுடை வேங்கடம் - வேடர்கள் நிறைந்த திருமலை, நான்காந்திரு - 47.

வேதகீதன் - வேதத்தினால் புகழ்ந்து பாடப்படுபவன். திருச்சந்த - 117.

வேதத்தினுட் பொருள் - திருவாய் மொழியில் நிற்கப் பாடியது. கண்ணிநுண் - 9.

வேதநாவர் - அந்தணர்கள். திருச்சந் - 23.

3215 வேதநான்கைந்து தீ வேள்வி - நான்கு வேதம், ஐந்து அக்கினி, ஐந்து மகா யக்ஞம். பெரிய - 9 - 7 - 6.

வேதநூற் பிராயம் நூறு - வேதநூல் பிரகாரம் மனிதர்களுக்கு வயது நூறு. திருமா - 3.

வேதப்பிரானார் - எம்பெருமான். பெரியாழ் - 5 - 2 - 1.

வேதாந்த விழுப்பொருள் - வேதாந்தங்களில் சொல்லப்டுகின்ற சிறந்த அர்த்தங்கள். பெரியாழ். 4 - 3 - 11.

வேம்பின் புழு - வேப்பமரத்திலுண்டான புழு. பெரிய - 11-8-7.

3220 வேம்புங்கறியாதல் - வேப்பிலையும் கறியமுதாகும். நான்முகந்திரு - 94.

வேய் - புல்லாங்குழல். பெரிய - 8 - 5 - 3.

வேயர் - அந்தணர். நாச்சியார் தனியன், பெரியாழ். 1 - 7 - 11, 4 - 10 - 10, 5 - 4 - 11.

வேயர் தங்கள் - அந்தணர்களுடைய. பெரியாழ் - 5 - 4 - 11.

வேல் வலவீன் - வேற்படையில் வல்லவன். பெருமாள் - 9 - 11.

3225 வேல்வலவனாலிநாடன் - வேற்படையை ஆளுகின்ற திருவாலி நாட்டுக்கதிபன். பெரிய. 4 - 4 - 10.

வேல - வெறியாட்டாளனே. திருவிருத் - 20.

வேலால் துன்னம் பெய்தல் - வேலால் துளைத்தலை இடுதல். நாச்சியார் - 13 - 2.

வேலை மோதும் மதிள் - கடல் அலைகள் வந்து மோதுகின்ற மதிள். திருவாய். 9 - 10 - 1.

வேழப் போதகம் அன்னவன் - யானைக்குட்டி போன்றவன். பெருமாள். 7 - 1.

3230 வேள் - முருகன். மன்மதன். திருநெடுந். 7.

வேள்வு - வேள்வி - யாகம். பெரிய. 6 - 4 - 8.

வேளுக்கை - காஞ்சிபுரத்திலிருந்து இரண்டுகல் தொலைவில் உள்ளது. நின்ற திருக்கோலம். மூன்றாந்திரு. 34, 62.

வேளுக்கைப்பாடி - வேளுக்கை என்ற திருப்பதி. மூன்றாந்திரு. 26.

வேளுஞ்சேயுமனையார். வேள் - மன்மதன், சேய் - முருகன். பெரிய. 6 - 7 - 1.

3235 வேனிலஞ்செல்வன் - சூரியன். திருவிருத். 25.

வைகுந்தக் குட்டன் - நித்திய சூரிகளுக்குப் பரிந்து நோக்கும்படியான பருவத்தை உடையவன். பெரிய. 3 - 6 - 3.

வைகுந்தம் - ஸ்ரீவைகுண்டம். பெரியாழ். 4 - 7 - 9.

வைகுந்த விண்ணகர் - திருநாங்கூரிலே உள்ள வைகுந்த விண்ணகரம் என்னும் திருப்பதி. 3 - 9 - 1 - 10.

வைட்டணவர். வைஷ்ணவர். திருவாய். 5 - 5 - 11.

3240 வைத்தநாள் - ஈசுவரன் நியமித்த ஆயுள். திருவாய். 6 - 7 - 11.

வைதிகன் - வேதநெறிப்படி ஆசார அனுஷ்டானமுள்ளவர். திருவிருத். 94.

வைதேகி - சீதை. (தந்திதாந்த நாமம்) பெருமாள். 10 - 6.

வைப்பு - புதையல். திருவாய். 1 - 7 - 2.

வையத்தேவர் - அந்தணர், அடியார். திருவாய்.

# நூற்றெட்டுத் திருப்பதிகளின் சுருக்கம்

## 1. திருவரங்கம்

எம்பெருமான் திருப்பெயர் - அரங்கநாதன் அழகிய மணவாளன்.

பிராட்டி - அரங்கநாயகி, ஸ்ரீரங்க நாச்சியார்.

விமாநம் - வேத சிருங்கம் என்கிற பிரணவாகார விமாநம்.

தீர்த்தம் - சந்திர புட்கரணி.

திருக்கோலம் - புஜங்கசயனம்.

சந்நிதி - தெற்கு.

இவரைத் துதித்துப்பேறு பெற்றவர்கள் - பிரமன், விபீடணன், தர்மன் சிவன் என்பவர்கள். ஆழ்வார் பதினொருவராலும் மங்களாசாசனம் செய்யப் பெற்றதும் மிகுதியான பாசுரங்களை யுடையதும் இத்திருப்பதி ஒன்றே.

## 2. உறையூர்

எம்பெருமான் பெயர் - நின்ற நம்பி.

தாயார் பெயர் - உறையூர் வல்லி, நிவாஸலக்ஷ்மி.

விமாநம் - பிரகாசிக்கின்ற மணிகள் பொருந்திய கல்யாணவிமாநம்.

தீர்த்தம் - சூரியபுட்கரணி.

கோலம் - நின்ற திருக்கோலம்.

சந்நிதி - வடக்கு.

பேறுபெற்றோர் - சூரியன்.

திருப்பாணாழ்வார் அவதாரத்தலம்

மங்களாசாசனம் - திருமங்கையாழ்வார்.

திருச்சி கோட்டை இரயில்வே நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவு.

## 3. தஞ்சாவூர்

எம்பெருமான் பெயர் - நரசிம்மன்.

தாயார் - செங்கமலவல்லி பிராட்டி.

விமாநம் - வேத சுந்தரவிமானம்.

தீர்த்தம் - சூரிய புட்கரணி

கோலம் - வீற்றிருந்த திருக்கோலம்

சந்நிதி - தெற்கு.

பராசர முனிவரும், மார்க்கண்டேயரும் பேறு பெற்ற இடம்.
பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசனம் செய்துள்ளார்கள்.

**4. அன்பில்**

எம்பெருமான் - வடிவழகியநம்பி

தாயார் - அழகிய வல்லி

விமாநம் - தாரக விமாநம்

தீர்த்தம் - மண்டுக புட்கரணி.

கோலம் - சயனத் திருக்கோலம்

சந்நிதி கிழக்கு நோக்கிய சந்நிதி. பேறு பெற்றோர் - பிரமன், வால்மீகி முனிவர் . திருமழிசை யாழ்வார் மங்களாசாசனம்.
லால்குடி இரயில்வே நிலையத்திலிருந்து கிழக்கே ஐந்துகல் தொலைவில் இத்திருப்பதி உள்ளது. திருச்சியிலிருந்து பேருந்து மூலமாகவும் செல்லலாம்.

**5. கரம்பை (உத்தமர் கோயில்)**

எம்பெருமான் - புருடோத்தமன்

தாயார் - அழகிய தேவி உர்வராதேவி

விமாநம் -உத்தியோக விமாநம்

தீர்த்தம் - கதம்ப தீர்த்தம்

கோலம் - சயனத்திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் கதம்ப முனிவர். திருமங்கையாழ்வார் மங்களாசனம் பெற்றது இத்திருப்பதி. திருச்சி கோட்டை இரயில்வே நிலையத்திலிருந்து வடக்கே ஐந்து கல் தொலைவில் உள்ளது.

**6. வெள்ளறை**

எம்பெருமான் - புண்டரீகாக்ஷன்

பிராட்டி - பங்கயச் செல்வி, பங்கஜ நாயகி

விமானம்- பதும விமானம்

தீர்த்தம் -குசலவ தீர்த்தம் பத்மதீர்த்தம், வராக, மணிகர்கனிசா தீர்த்தங்கள் உள்ளன என்பர். நின்ற திருக்கோலம்.

சந்நிதி - கிழக்கு.

பேறுபெற்றோர் - மார்க்கண்டேயர்,பூதேவி, சிபிசக்கரவர்த்தி, பிரம ருத்திராதிகள்.
பெரியாழ்வாரும், திருமங்கையாழ்வாரும் மங்களாசாசனம் செய்துள்ளனர்.திருச்சி, துறையூர் பேருந்து வழியில் உள்ளது இத்திருப்பதி.

**7. புள்ளம் பூதங்குடி.**

எம்பெருமான் - வல்வில்விராமன்.

தாயார் - பொற்றாமரையாள்.

விமாநம் - சோபன விமாநம்.

தீர்த்தம் - ஜடாயுதீர்த்தம்.

கோலம் - சயனத் திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு.

பேறுபெற்றோர் - ஜடாயு. ஜடாயு என்ற பறவைக்கு இராமபிரான் மோட்சம் கொடுத்த தலமாதலின் புள்ளங்பூதங்குடி என்று பெயர் பெற்றது போலும். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் பெற்ற திருப்பதி. சுவாமிமலை இரயில்வே நிலையத்திலிருந்தும் கும்ப கோணத்திலிருந்தும் பேருந்து மூலமாகவும் செல்லலாம்.

**8. திருப்பேர் நகர்**

எம்பெருமான் - அப்பக் குடத்தான்.

தாயார் - கமலவல்லி.

விமாநம் - இந்திர விமாநம்.

தீர்த்தம் - இந்திர தீர்த்தம்.

கோலம் - சயனம்.

சந்நிதி - மேற்கு.

பேறு பெற்றோர் - இந்திரனும், பராசரரும். திருமழிசையாழ்வார், நம்மாழ்வார், பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் செய்துள்ளனர்.
லால்குடி இரயில்வே நிலையத்திலிருந்து ஆறு கல் தொலைவில் உள்ளது.

**9. ஆதனூர்**

எம்பெருமான் - ஆண்டு அளக்கும் ஐயன்,பூமியை ஆண்டு, பூமியை காலால் அளந்த ஐயன்.

பிராட்டி - ஸ்ரீரங்கநாயகி

விமாநம் - பிரணவ விமாநம்

தீர்த்தம் - சூரியபுட்கரணி.

கோலம் - சயனத்திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு.

பேறுபெற்றோர் - பூமிதேவி. காமதேனு. திருமங்கையாழ்வார் மங்களா சாசனம் பெற்றது. காமதேனுக்குப் பிரத்யக்ஷமான தலமாதல் பற்றி ஆதனூர் என்று பெயர் பெற்றது என்பர். சுவாமிமலை இரயில்வே நிலையத்திலிருந்து $1^1/_2$ கல் தொலைவில் உள்ளது.

**10. தேரழுந்தூர்**

எம்பெருமான் - ஆமருவியப்பன். தேவாதிராஜன்.

பிராட்டி- செங்கமல வல்லி.

விமாநம் - கருட விமானம்.

தீர்த்தம் - பிரகலாத தீர்த்தம்.

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - பிரகலாதன் ஹரிச்ரவஸ் அகத்தியர். திருமங்கை யாழ்வார் மங்களாசாசனம் பெற்றது. தேரழந்தூர் இரயில்வே நிலையம் உள்ளதலம்.

**11. சிறுபுலியூர்**

எம்பெருமான் - அருண்மாகடலமுதன்.

பிராட்டி- திருமாமகள்

விமாநம் - நந்தவர்த்தன விமானம்

தீர்த்தம் - அனந்த சரசு.

கோலம் - சயனத்திருக்கோலம்.

சந்நிதி - தெற்கு

பேறுபெற்றோர் - வியாக்கிரபாதர், வியாசர். திருமங்கையாழ் வாரால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருப்பதி. இத் திருப்பதி சோழநாட்டிலுள்ள கொல்லுமாங்குடியை அடுத்து ஒரு கல்தொலைவில் இருக்கிறது.

**12. திருச்சேறை**

எம்பெருமான் - சாரநாதன்.

பிராட்டி- சாரநாயகி.

விமானம் - சார விமானம்

தீர்த்தம் - சாரபுஷ்கரணி

கோலம் - நின்ற திருக்கோலம்.

சந்நிதி - கிழக்கு.

பேறுபெற்றோர் - காவேரி, மார்க்கண்டேயர், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் பெற்றது இத்தலம். வடமொழியில் பஞ்சசார க்ஷேத்திரம் என வழங்கப்படும். கும்பகோண இரயில்வே நிலையத்திலிருந்து ஏழு கல் தொலைவில் உள்ளது.

**13. தலைச்சங்க நாண்மதியம்**

எம்பெருமான் - நாண்மதியப்பெருமாள் வெண்சுடர்ப்பெருமாள். வ்யோமஜோதி

பிராட்டி- தலைச்சங்க நாச்சியார் செங்கமலவல்லி,

விமானம் - சந்திர விமானம்.

தீர்த்தம் - சந்திரபுட்கரணி

கோலம் - நின்ற திருக்கோலம்.

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - சந்திரன் நித்திய சூரிகள் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். சோழநாட்டிலுள்ள ஆக்கூரிலிருந்து இரண்டு கல் தொலைவில் உள்ளது.

**14. திருக்குடந்தை**

எம்பெருமான் - சாரங்கபாணி, ஆராவமுதன்.

பிராட்டி- கோமளவல்லி.

விமானம் - வேதவிமானம்

தீர்த்தம் - பொற்றாமரை.

கோலம் - சயனத் திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - ஹேம முனிவர், கோமளவல்லி பெரியாழ்வார், ஆண்டாள், திருமழிசைப்பிரான், திருமங்கை மன்னன், பூதத்தாழ்வார், பேயாழ்வார், நம்மாழ்வார் முதலியோர் மங்களாசாசனம் செய்துள்ளனர். இத்தலம் 51 பாசுரங்கள் கொண்டது. இத்தலத்தில் திருமழிசையாழ்வார் எம்பெருமானை எழுந்திருந்து பேசு எனத் தம் பக்தி வீறுடைமை தோன்றக் கூறினார். ஆகவே அவர் திருமழிசைப்பிரான் எனப் பெயர் பெற்றார்.

**15. கண்டியூர்**

எம்பெருமான் - அரன்சாபம் தீர்த்தவர்
பிராட்டி- கமலவல்லி
விமாநம் - சந்திர விமாநம், கமலவிமாநம்
தீர்த்தம் - கபால தீர்த்தம்
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - சிவபெருமான். இங்கு ருத்திரன் பூசித்துக் கபால நிவர்த்தி பெற்றார். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். சிவத்தலங்களில் பிரசித்தி பெற்ற தலமாகும். அட்டவீரட்டத் தலங்களுள் ஒன்று சம்பந்தரும்,நாவுக்கரசரும் பாடியுள்ளனர்.

**16. திரு விண்ணகர், ஒப்பிலியப்பன் சந்நிதி, விஷ்ணுநகர் விண்ணகர்.**

எம்பெருமான் - ஒப்பிலியப்பன், ஸ்ரீநிவாசன்
பிராட்டி- பூமிதேவி
விமாநம் - விஷ்ணு விமாநம்
தீர்த்தம் - அகோராத்திரபுட்கரணி
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - மார்க்கண்டேயர், பிருகுமுனிவர் திருமங்கை யாழ்வார் மங்களாசாசனம். இரயில்வே நிலையம் உள்ள தலம்.

**17. திருக்கண்ணபுரம்**

எம்பெருமான் - சௌரிராஜன்
பிராட்டி - கண்ணபுர நாயகி
விமாநம் - உத்பலாவதக விமாநம்
தீர்த்தம் - நித்தியபுட்கரணி
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - துண்டக முனிவர், கண்வ முனிவர்.
இத்தலம் பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகரர், நம்மாழ்வார் இவர்களால் பாடப்பெற்றது.

**18. திருவாலி திருநாகீர்**

எம்பெருமான் - வயலாலிமணவாளன்

பிராட்டி - அமிருதவல்லி

விமானம் - சுமநோவிமானம் அஷ்டாக்ஷரவிமானம் என்பர்

தீர்த்தம் - இலாட்சணி அலாதநி

கோலம் - வீற்றிருக்கும் திருக்கோலம்

சந்நிதி - மேற்கு

பேறுபெற்றோர் - திருமங்கையாழ்வார்

குலசேகரர், திருமங்கையாழ்வார் இவர்களால் பாடப்பெற்றது. சீர்காழியிலிருந்து ஆறுகல் தொலைவில் உள்ளது.

**19. திருநாகை**

எம்பெருமான் - சுந்தரராஜன்

பிராட்டி - சௌந்தர்ய வல்லி

விமானம் - சௌந்தர்ய விமானம்

தீர்த்தம் - சாரபுட்கரணி

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - நாகராசன். திருமங்கையாழ்வார் மங்களா சாசனம் இரயில்வே நிலையம் உள்ள தலம்.

**20. திருநறையூர்**

எம்பெருமான் - பரிபூரண ஸ்ரீநிவாசன், பரிமளரங்கன்

பிராட்டி - அன்னவடிவழகி வஞ்சுலவல்லி

விமானம் - ஸ்ரீநிவாச விமானம்

தீர்த்தம் - மணிமுத்தாநதி

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - பிரமன், மேதாளி முனிவர். திருமங்கையாழ்வார் மங்களாசனம், கும்பகோணம் திருவாரூர் வழியில் உள்ளது இத்தலம். இத்தலம் நாச்சியார் கோயில் என்று வழங்குகிறது.

**21. நந்தி விண்ணகரம்**

எம்பெருமான் - நந்திநாதன் ஜகந்நாதன்

பிராட்டி - சண்பகவல்லி

விமாநம் - அனந்த விமாநம், மந்த்ர விமாநம்
தீர்த்தம் - நந்தி தீர்த்தம்.
கோலம் - சயனத்திருக்கோலம்
சந்நிதி - மேற்கு
பேறுபெற்றோர் - நிமி, நந்திதேவர். திருமங்கையாழ்வார் மங்களா சாசனம். கும்பகோணத்திற்கு மூன்று கல்தொலைவில் உள்ளது. நாதன் கோயில் என்ற திருப்பெயரும் உண்டு.

**22. திரு இந்தளூர்**

எம்பெருமான் - பரிமளரங்கநாதன்
பிராட்டி - சந்திர சாப விமோச வல்லி, புண்டரீக வல்லி.
விமாநம் - வேதாமோதவிமாநம்
தீர்த்தம் - சந்திர புட்கரணி
கோலம் - சயனத்திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - சந்திரன். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். மயிலாடுதுறையிலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது.

**23. தில்லைச் சித்திர கூடம்**

எம்பெருமான் - கோவிந்தராசன்
பிராட்டி - புண்டரீகவல்லி
விமாநம் - சாத்வீக. விமானம்
தீர்த்தம் - புண்டரீக புட்கரணி
கோலம் - சயனத்திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - கண்ணுவ முனிவர், தேவர்கள்.
குலசேகர ஆழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். சிதம்பரம் இரயில் நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது. சக்கரவர்த்தித் திருமகனாகிய இராமபிரானுக்கு வடநாட்டுச் சித்திர கூடத்தைப் போன்று இத்தலமும் உகந்தது.

**24. சீராம விண்ணகர்**

எம்பெருமான் - தாடாளன். த்ரிவிக்ரம நாராயணன்.
பிராட்டி - சுகந்த குந்தல நாயகி, மட்டவிழுங்குழலி
விமாநம் - புட்கலா வர்த்தக விமாநம்

தீர்த்தம் - சங்கரபுஷ்கரணி
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - அட்டகோணமுனிவர்
திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.சீகாழியிலிருந்து அரை கல் தொலைவில் உள்ளது.

**25. கூடலூர் (ஆடுதுறைப் பெருமாள் கோயில்)**

எம்பெருமான் - ஜகத்ரக்ஷகன், கூடல் மன்னன்
பிராட்டி - பத்மாசநி
விமாநம் - சுத்த சத்துவ விமாநம்
தீர்த்தம் - சக்கர தீர்த்தம்
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - நந்தக முனிவர் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். சோழநாட்டிலுள்ள பாபநாசத்திலிருந்து ஐந்து கல் தொலைவில் உள்ளது.

**26. திருக்கண்ணங்குடி**

எம்பெருமான் - சியாமளமேனிப்பெருமாள்
பிராட்டி - அரவிந்தவல்லி
விமாநம் - உத்பல விமானம்
தீர்த்தம் - சிரவணபுட்கரணி
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - கௌதம முனிவர் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். தமிழ் நாட்டுப் பஞ்ச கிருஷ்ண க்ஷேத்திரங்களுள் ஒன்று. கீவளூர் இரயில் நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது. இத்தலத்தைப் பற்றி உறங்காப்புளி, ஊறாக்கிணறு காயாமகிழ், தீராவழக்கு திருக்கண்ணங்குடி என்று ஒரு பழமொழி உண்டு.

**27. திருக்கண்ண மங்கை**

எம்பெருமான் - பக்தவத்ஸலன்
பிராட்டி - அபிடேகவல்லி
விமாநம் - உத்பலவிமாநம்

தீர்த்தம் - தர்சன புஷ்கரணி

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - வருணண், மார்க்கண்டேயர், ரோமசர். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். திருவாரூருக்கு நான்கு கல் தொலைவில் உள்ளது.

**28. கவித்தலம்**

எம்பெருமான் - கஜேந்திர வரதர்

பிராட்டி - ரமாமணி வல்லி

விமாநம் - வேதாங்க விமாநம்

தீர்த்தம் - பொன்னியாறு, கஜேந்திர தீர்த்தம்

கோலம் - சயனத் திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - கஜேந்திரன் திருமழிசையாழ்வார் மங்களாசாசனம், சோழநாட்டில் பாபநாசத்திலிருந்து இரண்டு கல் தொலைவில் உள்ளது. கபிஸ்தலம் என்று இப்பொழுது வழங்கப்படுகிறது.

**29. திருவெள்ளியங்குடி**

எம்பெருமான் - கோலவில்லிராமன்

பிராட்டி - மரகதவல்லி

விமாநம் - புஷ்கலாவர்த்தக விமாநம்

தீர்த்தம் - சுக்கிர புட்கரணி

கோலம் - சயனம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - பராசரமுனிவர், இந்திரன், சுக்கிரன், பிரமன். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். திருவிடைமருதூரிலிருந்து ஐந்து கல் தொலைவில் உள்ளது. சுக்கராசார்ரியருக்கு அருள் பாலித்த தலமாதல் பற்றி இத்தலத்திற்குத் திருவெள்ளியங்குடி என்று பெயர்.

**30. மணிமாடக் கோயில்**

எம்பெருமான் - நந்தா விளக்கு, நர நாராயணன்.

பிராட்டி - புண்டரீகவல்லி

விமாநம் - பிரணவ விமாநம்

தீர்த்தம் - ருத்திர புட்கரணி.

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - கஜேந்திரன், இந்திரன், ஏகாதசருத்திரர். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். சீகாழியிலிருந்து ஐந்து கல் தொலைவில் உள்ளது.

**31. வைகுந்த விண்ணகரம்**

எம்பெருமான் - வைகுந்த நாதன் தாமரைக்கண்ணுடைய பிரான்.

பிராட்டி - வைகுந்த வல்லி

விமானம் - சத்தியா வர்த்தக விமானம்

தீர்த்தம் - இலக்குமி தீர்த்தம்

கோலம் - வீற்றிருந்த திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - மதங்க முனிவர். திருமங்கையாழ்வார் மங்களா சாசனம். சீகாழியிலிருந்து ஐந்து கல். ஸ்ரீவைகுண்டத்தில் எம்பெருமான் எழுந்தருளியிருப்பது போலவே இத்தலத்திலும் வீற்றிருந்த திருக்கோலமாகச் சேவை சாதித்தலால் வைகுந்த விண்ணகரம் என்று பெயர் பெற்றது என்பது.

**32. அரிமேய விண்ணகரம்**

எம்பெருமான் - குடமாடும் கூத்தர்

பிராட்டி - அமுதகடவல்லி

விமானம் - உச்சச்ருங்க விமானம்

தீர்த்தம் - அமுதப்புனல், தனுஷ்கோடி

கோலம் - வீற்றிருக்கும் கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - மதங்க முனிவர். திருமங்கையாழ்வார் மங்களா சாசனம். சீர்காழிக்கு ஐந்து கல் தொலைவில் உள்ளது.

**33. திருத்தேவனார் தொகை**

எம்பெருமான் - மாதவப் பெருமாள், தேவநாயகன்.

பிராட்டி - பைந்தோகைப் பிராட்டி க்ஷீராப்தி நாயகி

விமானம் - சோபன விமானம்

தீர்த்தம் - தூய அத்தி தீர்த்தம்.

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - மேற்கு

பேறுபெற்றோர் - வசிஷ்டர்

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். சீகாழியிலிருந்து நான்கு கல் தொலைவு

**34. வண்புருடோத்தமம்**

எம்பெருமான் - வண்புருஷோத்தமன்

பிராட்டி - புருடோத்தமநாயகி

விமாநம் - சஞ்சீவி விமாநம்

தீர்த்தம் - திருப்பாற் கடல்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - உபமன்யு முனிவர். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். சீகாழியிலிருந்து ஐந்து கல் தொலைவில் உள்ளது.

**35. செம்பொன் செய்கோயில்**

எம்பெருமான் - பேரருளாளன்

பிராட்டி - அல்லிமாமலராள்

விமாநம் - கனகவிமாநம்

தீர்த்தம் - நித்தியபுட்கரணி

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - சிவன், திருமங்கையாழ்வார் - மங்களா சாசனம் சீகாழிக்கு ஐந்து கல் தொலைவில் உள்ளது.

**36. திருத்தெற்றியம்பலம்**

எம்பெருமான் - செங்கண்மால், ரக்தாக்ஷர்

பிராட்டி - செங்கமலவல்லி

விமாநம் - வேதவிமாநம்

தீர்த்தம் - சூரியபுட்கரணி

கோலம் - சயனத் திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - செங்கமலவல்லி, அநந்தாழ்வார்.

திருமங்கையாழ்வார் - மங்களாசாசனம். சீகாழியிலிருந்து ஐந்து கல் தொலைவு.

37. திருமணிக் கூடம்

எம்பெருமான் - மணிக்கூட நாயகன்

பிராட்டி - திருமாமகள்

விமானம் - கனக விமானம்

தீர்த்தம் - சந்திர புட்கரணி.

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - சந்திரன், பெரிய திருவடி.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம் சீகாழியிலிருந்து ஐந்து கல் தொலைவில் உள்ளது.

38. காவளம்பாடி

எம்பெருமான் - கிருஷ்ணன். வேணுகோபாலன்.

பிராட்டி - மடவரமங்கை

விமானம் - வேதாமோத விமானம்

தீர்த்தம் - ஏமப்பொய்கை.

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - சேனைத் தலைவர், ருத்திரன். திருமங்கையாழ்வார் - மங்களா சாசனம். சீகாழியிலிருந்து ஏழு கல் தொலைவு.

39. திருவெள்ளக்குளம்

எம்பெருமான் - நாராயணன்

பிராட்டி - திருமாமகள்

விமானம் - தத்துவ விமானம்

தீர்த்தம் - சுவேத புட்கரணி

கோலம்- நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - சுவேதமன்னன். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

சீகாழி இரயில்வே நிலையத்திலிருந்து நான்கு கல்தொலைவில் உள்ளது.

**40. பார்த்தன் பள்ளி**

எம்பெருமான் - நாராயணன்

பிராட்டி - தாமரை நாயகி

விமாநம் - நாராயண விமாநம்

தீர்த்தம் - சங்க தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - மேற்கு

பேறுபெற்றோர் - அருச்சுனன், ஏகாதச ருத்திரர்கள்,வேதம். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். சீகாழியிலிருந்து ஏழு கல் தொலைவில் உள்ளது.

இதுவரை சோழ நாட்டிலுள்ள திருப்பதிகள்.

## பாண்டிய நாட்டுத் திருப்பதிகள்.

**41. திருமாலிருஞ்சோலை**

எம்பெருமான் - சுந்தர ராஜப்பெருமான்

பிராட்டி - சவுந்தரவல்லி

விமாநம் - நாராயண விமாநம்

தீர்த்தம் - சங்க தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - யமதர்மன், மலையத்துவசப்பாண்டியன், பூதத்தாழ்வார், பேயாழ்வார் இவர்கள் மங்களாசாசனம் செய்துள்ளனர். மிகப்புகழ் பெற்ற வைணவத்திருப்பதி. இத்திருப்பதிக்கு 128 பாசுரங்கள் உண்டு. இத்தலத்திற்கு அழகர் கிள்ளை விடு தூது என்ற மிகச்சிறந்த பிரபந்தம் உண்டு. மதுரையிலிருந்து 12 கல்தொலைவில் உள்ளது.

**42. திருக்கோட்டியூர்**

எம்பெருமான் - சொக்க நாராயணன்

பிராட்டி - திருமாமகள் நாச்சியார்

விமானம் - அட்டாங்க விமானம்

தீர்த்தம் - தெய்வபுட்கரணி

கோலம் - சயனத் திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - கதம்ப முனிவர்

பூதத்தாழ்வார், பேயாழ்வார். திருமழிசைப்பிரான், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். இத்தலத்தில் நின்றும், இருந்தும், கிடந்தும், நடந்தும், கூத்தாடியும் சேவை சாதிக்கும் திருக்கோலங்கள் உள்ளன.

**43. திருமெய்யம்**

எம்பெருமான் - சத்தியகிரி நாதன்

பிராட்டி - உய்யவந்த நாச்சியார், சத்திய நாயகி.

விமானம் - சத்தியகிரி விமானம்

தீர்த்தம் - சத்திய புட்கரணி

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - மங்களாசாசனம்.

இத்திருப்பதி திருமயம் இரயில்வே நிலையத்திலிருந்து அரை கல் தொலைவில் உள்ளது. திருச்சிராப்பள்ளிக்குத் தெற்கே 45 கல் தொலைவு.

**44. திருப்புல்லாணி (தர்ப்ப சயனம்)**

எம்பெருமான் - ஜகந்நாதன் தெய்வச் சிலையன்

பிராட்டி - பூவில் இருந்தாள்

விமானம் - கல்யாண விமானம், புண்டரீக விமானம்

தீர்த்தம் - சக்கர தீர்த்தம்

கோலம் - வீற்றிருந்த திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு.

பேறுபெற்றோர் - புல்லாரணிய முனிவர், சமுத்திர ராஜன்.

திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். இராமநாதபுரம் இரயில்வே ஸ்டேஷனுக்குத் தென்கிழக்கே ஐந்து கல் தொலைவில் உள்ளது. கோயில் பிராகாரத்தில் சக்கரவர்த்தித் திருமகனான இராமன் தர்ப்பையில் சயனக் கோலமாகச் சேவை சாதிக்கிறார். வருணபகவானும், விபீஷணாழ்வாரும் அடைக்கலம் புகுந்த இடம்.

இத்தலத்தைச் சுற்றியுள்ள தலங்கள் உத்தரகோச மங்கை, இராமேச்சுவரம், தனுஷ்கோடி முதலியன.

**45. திருத்தண்கால்**

எம்பெருமான் - தண்காலப்பன், அப்பன்.

பிராட்டி - அன்னநாயகி, அநந்த நாயகி, அமிர்த நாயகி, ஜாம்பவல்லி

விமானம் - தேவ சந்திர விமானம், ஹம்ஸ விமானம்,

தீர்த்தம் - பாவவிநாசதீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறு பெற்றோர் - புலி, ஸ்ரீவல்லபன், சந்திரன். திருமங்கையாழ்வார். பூதத்தாழ்வார் மங்களாசாசனம் சிவகாசி இரயில் நிலையத்திலிருந்து இரண்டு கல் தொலைவில் உள்ளது.

**46. திருமோகூர்**

எம்பெருமான் - காளமேகப் பெருமாள்

பிராட்டி - மோகூர் வல்லி

விமானம் - கேதகி விமானம்

தீர்த்தம் - க்ஷீராப்தி புட்கரணி

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் பிரமன், ருத்திரன், பிறதேவர்கள். திருமங்கை யாழ்வார், நம்மாழ்வார் மங்களாசாசனம். மதுரைக்குக் கிழக்கில் ஏழுகல் தொலைவில் உள்ளது. வடமொழியில் மோகனபுரம் எனப்படும். இறைவனிடம் மோகத்தை (பக்தி) அருளும் ஊர் என்பது பற்றி மோகூர் என்றாயிற்று.

**47. திருக்கூடல் (தென்மதுரை)**

எம்பெருமாள் - கூடலழகர்,

பிராட்டி - மதுரவல்லி, வரகுண வல்லி

விமானம் - அஷ்டாங்க விமானம்

தீர்த்தம் - சக்கர தீர்த்தம்

கோலம் - வீற்றிருந்த திருக்கோலம்

பேறுபெற்றோர் - பிருகுமுனிவர். செல்வநம்பி, சிவவாக்கியர், அம்பரீஷன், சனகாதியர், திருமங்கையாழ்வார் திருமழிசைப் பிரான் மங்களாசாசனம். மதுரை இரயில்வே நிலையம்

**48. ஸ்ரீவில்லி புத்தூர்**

எம்பெருமான் - வடபத்திர சயனர், அரங்க மன்னர்.

பிராட்டி - ஆண்டாள்

விமானம் - சஞ்சன விமானம்.

தீர்த்தம் - திருமுக்குளம்

கோலம் - சயனத் திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - மண்டூக முனிவர் பெரியாழ்வார். இராம நாதபுரம் மாவட்டத்தில் ஸ்ரீவில்லிபுத்தூர் இரயில் நிலையத்திற்கு அருகில் உள்ளது. பெரியாழ்வாரும், ஆண்டாளும் அவதரித்த தலம்.

**49. திருக்குருகூர்**

எம்பெருமான் - ஆதி நாதப்பெருமாள்

பிராட்டி - ஆதி நாயகி, திருநகரிவல்லி

விமானம் - கோவிந்த விமானம்

தீர்த்தம் - தாம்பிரபர்ணி தீர்த்தம், பிரம புட்கரணி

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - நம்மாழ்வார், மதுரகவி ஆழ்வார், நாதமுனி, சக்கரத்தாழ்வான்.

நம்மாழ்வார் அவதரித்த தலம், ஆதலால் ஆழ்வார் திருநகரி எனப் பெயர் பெற்றது. தவம் செய்வதற்கு இடம் தேடிய பிரமனுக்கு ஆகாயவாணி இவ்விடத்தைக் காட்டி (குரு - செய்) என்று கட்டளை இட்டபடியால் இது குருகூர் ஆயிற்று இத்தலம் ஆழ்வார் திருநகரி இரயில் நிலையத்தின் அருகில் உள்ளது.

**50. தொலைவில்லி மங்கலம்**

எம்பெருமான் - கருங்கடல் வண்ணன்

பிராட்டி - கருந்தடங்கண்ணி

விமானம் - கற்ப விமானம்

தீர்த்தம் - வருண தீர்த்தம், தாம்பிரபரணி நதி

கோலம் - நின்ற திருக்கோலம்,

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - இந்திரன், வாயு, வருணன், கோசிகன்.

நம்மாழ்வார் மங்களாசாசனம். இத்தலம் ஆழ்வார் திருநகரிக்கு இரண்டு கல் தொலைவில் உள்ளது.

**51. சிரீவரமங்கை வானமாலை, நாங்குனேரி**

எம்பெருமான் - தெய்வநாயகன், வானமாமலைப் பெருமான்

பிராட்டி - சிரீவர மங்கை

விமாநம் - நந்த வர்த்தகம் பத்மாகர விமாநம்

தீர்த்தம் - இந்திர புட்கரணி

கோலம் - வீற்றிருந்த திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - இந்திரன், உரோமச முனிவர்

நம்மாழ்வார் - மங்களாசாசனம். திருநெல்வேலியிலிருந்து பதினெட்டுக் கல் தொலைவில் உள்ளது.

**52. திருப்பேரை**

எம்பெருமான் - மகர நெடுங்குழைக்காதர்

பிராட்டி - குழைக்காது வல்லி

விமாநம் - பத்ர விமாநம்

தீர்த்தம் - சுக்ர புட்கரணி

கோலம் -வீற்றிருந்த திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - பிரமன், ருத்திரன்

நம்மாழ்வார் மங்களாசாசனம். ஆழ்வார் திருநகரியிலிருந்து தென் கிழக்கில் மூன்று கல் தொலைவில் உள்ளது . இவ்வூரைப் பற்றிய பிறசெய்திகள் ஐயரவர்கள் பதிப்பிதுள்ள மகரநெடுங் குழைக்காதர் பாமாலை என்னும் நூலின் மூலம் அறிந்து கொள்ளலாம்.

**53. திருப்புளிங்குடி**

எம்பெருமான் - காய்சின வேந்தன்

பிராட்டி - புளிங்குடி வல்லி

விமாநம் - வேதசார விமாநம்

தீர்த்தம் - வருண தீர்த்தம்

கோலம் _ சயனத் திருக்கோலம்
சந்நிதி _ கிழக்கு
பேறுபெற்றோர் _ வருணன், நிருதி, நான்மறை.
நம்மாழ்வார் _ மங்களாசாசனம். ஸ்ரீ வைகுண்டத்திலிருந்து இரண்டு கல் தொலைவில் உள்ளது.

**54. வரகுணமங்கை**

எம்பெருமான் _ விசயாசனர்
பிராட்டி _ வரகுணவல்லி
விமாநம் _ விசய விமாநம்
தீர்த்தம் _ அக்னி தீர்த்தம்
கோலம் _ வீற்றிருந்த கோலம்
சந்நிதி _ கிழக்கு
பேறுபெற்றோர் _ அக்னிபகவான்.
நம்மாழ்வார் _ மங்களாசாசனம்
ஸ்ரீ வைகுண்டம் இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே ஒன்றரைக்கல் தொலைவில் உள்ளது.

**55. ஸ்ரீவைகுந்தம்**

எம்பெருமான் _ வைகுந்த நாதன், கள்ளப்பிரான்
பிராட்டி _ வைகுந்தவல்லி
விமாநம் _ இந்திர விமானம், சந்திர விமானம்
தீர்த்தம் _ தாம்பிரபர்ணி
கோலம் _ நின்ற திருக்கோலம்
சந்நிதி _ கிழக்கு
ஸ்ரீ வைகுண்டம் இரயில் நிலையத்திலிருந்து ஒருகல் தொலைவில் உள்ளது. இத்திருப்பதியைச் சைவர்கள் திருக்கயிலை என்பர்.
பேறுபெற்றோர் _ இந்திரன் _ பிருது.

**56. திருக்குளந்தை (பெருங்குளம்)**

எம்பெருமான் _ மாயக் கூத்தன்
பிராட்டி _ குளந்தை வல்லி
விமாநம் _ ஆனந்த விமானம்
தீர்த்தம் _ இந்திர தீர்த்தம் பெருங்குளத் தீர்த்தம்
கோலம் _ நின்ற திருக்கோலம்
சந்நிதி _ கிழக்கு
பேறுபெற்றோர் _ அர்ச்சுனன், பிரகஸ்பதி, எமன். இத்திருப்பதி ஸ்ரீவைகுண்டத்திலிருந்து ஏழு கல் தொலைவில் உள்ளது.
நம்மாழ்வார் _ மங்களாசாசனம்.

57. திருக்குறுங்குடி

எம்பெருமான் _ வைணவ நம்பி, நின்ற நம்பி, இருந்த நம்பி, திருப்பாற்கடல் நம்பி, திருக்குறுங்குடி நம்பி.
பிராட்டி _ குறுங்குடி வல்லி, இலக்குமிதேவி
விமாநம் _ ஸ்ரீநகர விமாநம், பஞ்ச கேதக விமாநம்
தீர்த்தம் _ திருப்பாற்கடல்
கோலம் _ நின்ற திருக்கோலம்
சந்நிதி _ கிழக்கு
பேறுபெற்றோர் _ கோசிகன், நூறு அந்தணர்கள், பல ருத்திரர்கள். திருநெல்வேலி இரயில் நிலையத்திலிருந்து இருபத்தேழு கல் தொலைவில் உள்ளது. வாமனனது க்ஷேத்திர மாதலால் இதற்குக் குறுங்குடி எனப் பெயர் பெற்றது என்பர்.
நம்மாழ்வார் _ பெரியாழ்வார், திருமழிசையாழ்வார், திருமங்கை யாழ்வார் மங்களாசாசனம்.

58. திருக்கோளூர்

எம்பெருமான் _ வைத்த மாநிதிப் பெருமாள்
பிராட்டி _ கோளூர் வல்லி,
விமாநம் _ ஸ்ரீஹர விமாநம்,
தீர்த்தம் _ குபேர தீர்த்தம், தாம்பிரபர்ணி
திருக்கோலம் _ சயனத் திருக்கோலம்
சந்நிதி _ கிழக்கு
பேறுபெற்றோர் _ மதுரகவி, குபேரன்
நம்மாழ்வார் _ மங்களாசாசனம். இத்தலம் ஆழ்வார் திருநகரியி லிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது. நவநிதிகள், இங்கு ஒளிந்து கொண்டிருக்கின்றன என்று அதர்மம் குபேரனுக்குக் கோள் சொல்லிய இடமாதல் பற்றி இத்தலத்திற்குத் திருக்கோளூர் என்று பெயர் பெற்றது.

## மலை நாட்டுத் திருப்பதிகள்

59. திருவனந்தபுரம்

எம்பெருமான் _ அனந்த பத்மநாபப் பெருமாள்
பிராட்டி _ ஆதிலக்குமி
விமாநம் _ கனகசபை விமாநம் ஹேமகூட விமாநம்
தீர்த்தம் _ மச்சவாவி
கோலம் _ சயனத் திருக்கோலம்
சந்நிதி _ கிழக்கு
பேறுபெற்றோர் _ இந்திரன், சந்திரன், சிவன். திருவனந்தபுரம் இரயில் நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது.
நம்மாழ்வார் _ மங்களாசாசனம்.

### 60. திருவண்பரிசாரம்

எம்பெருமான் - திருவாழ்மார்பன்

பிராட்டி - இலக்குமி

விமாநம் - கல்யாண விமாநம்

தீர்த்தம் - இலக்குமி தீர்த்தம்

கோலம் - வீற்றிருந்த கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - காரி, உடைய நங்கை

நம்மாழ்வார் மங்களாசாசனம். திருநெல்வேலியிலிருந்து நாற்பது கல் தொலைவில் உள்ளது. நம்மாழ்வாரின் தாயார் பிறந்தகம்.

### 61. திருக்காட் கரை

எம்பெருமான் - காட்கரையப்பன்

பிராட்டி - பெருஞ்செல்வ நாயகி

விமாநம் - புட்கல விமாநம்

தீர்த்தம் - கபில தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - கபில முனிவன்

நம்மாழ்வார் - மங்களாசாசனம். எர்ணாகுளம் இரயில் நிலையத்திலிருந்து ஏழுகல் தொலைவில் உள்ளது.

### 62. திருமூழிக்களம்

எம்பெருமான் - ஸ்ரீஸூக்தி நாதப்பெருமாள்

பிராட்டி - மதுரவேணி

விமாநம் - சந்திர விமாநம்

தீர்த்தம் - விசால தீர்த்தம், பெருங்குள தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - வேனன், மருத முனிவர், ஹரீதமகாமுனிவர்

நம்மாழ்வார். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்

எர்ணாகுளம் செருவண்ணூர் இரயில் பாதையில் கருக்குட்டி நிலையத்திற்கு நான்கு கல் தொலைவில் உள்ளது.

**63. திருச்செங்குன்றூர்**

எம்பெருமான் - இமையவரம்பன்

பிராட்டி - செங்கமலவல்லி

விமானம் - ஜகத்ஜோதி விமானம்

தீர்த்தம் - சங்கதீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - யாகம் செய்தமூவாயிரவர். சங்கரன் கொட்டாரக்கரை இரயில் நிலையத்திலிருந்து கோட்டயம் போகும் பேரூந்து வழியில் முப்பத்தாறு கல் தொலைவில் உள்ளது நம்மாழ்வார் மங்களாசாசனம்

**64. திருப்புலியூர் (குட்ட நாடு)**

எம்பெருமான் - மாயப்பிரான்

பிராட்டி - பொற்கொடி நாச்சியார்

விமானம் - புருடோத்த விமானம், புருஷ ஸூக்த விமானம்

தீர்த்தம் - ப்ரக்ஞாசரஸ் தீர்த்தம், பூதன்வாவி

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - சப்த ரிஷிகள் கருடன் - நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்

இத்தலம் கொட்டாரக் கரையிலிருந்து முப்பத்து மூன்று கல் தொலைவில் உள்ளது.

**65. திருநாவாய்**

எம்பெருமான் - நாராயணன்

பிராட்டி - மலர் மங்கை நாச்சியார்

விமானம் - வேத விமானம்

தீர்த்தம் - கமல தடாகம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - கஜேந்திரன், சபரி,

திருமங்கையாழ்வார் ,நம்மாழ்வார் மங்களாசாசனம் செறுவண்ணூர் கள்ளிக்கோட்டை இரயில் பாதையில் திருநாவாய் இரயில்

நிலையத்திற்குத் தெற்கே பாரத்புழை என்ற ஆற்றங்கரையில் உள்ளது.

**66. திருவல்லவாழ்**

எம்பெருமான் - கோலப்பிரான்

பிராட்டி - செல்வத்திருக்கொழுந்து (வாத்ஸல்ய தேவி)

விமானம் - சதுரங்க கோல விமானம்.

தீர்த்தம் - கண்டாகர்ண தீர்த்தம், செங்கழுநீர்த்தடம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - கண்டாகர்ணன்

நம்மாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்

இத்தலம் கொட்டாரக்கராவிலிருந்து முப்பத்தாறு கல் தொலைவில் உள்ளது.

**67. திருவண் வண்டூர்.**

எம்பெருமான் - கமல நாதன், கடல் மேனிப்பிரான்,

பிராட்டி - கமலவல்லி

விமானம் - வேதாலய விமானம்

தீர்த்தம் - பம்பா தீர்த்தம், பாபநாச தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - மேற்கு

பேறுபெற்றோர் - நாரதர்

நம்மாழ்வார் மங்களாசாசனம். கொட்டாரக் காராவிலிருந்து முப்பத்தைந்து கல். பம்பா நதியின் வடகரையில் உள்ளது. திருச் செங்குன்றூரிலிருந்து கோட்டயம் போகும் பேருந்தில் மழுக்கூரில் இறங்கி ஒன்றரைக் கல் தொலைவு போக வேண்டும்

**68. திருவாட்டாறு**

எம்பெருமான் - ஆதிகேசவப் பெருமாள்

பிராட்டி - பத்மிநீதேவி,திருமங்கை

விமானம் - அட்டாக்கர விமானம்

தீர்த்தம் - இராம தீர்த்தம்,கடல்வாய்த் தீர்த்தம்

கோலம் - சயனத் திருக்கோலம்

சந்நிதி - மேற்கு

பேறுபெற்றோர் - பரசுராமன், இந்திரன், சந்திரன்.

நம்மாழ்வார் - மங்களாசாசனம். இத்தலம் திருவனந்தபுரத்தி லிருந்து இருபத்தெட்டுக் கல் தொலைவில் உள்ளது.

**69. திருவித்துவக்கோடு.**

எம்பெருமான் - அபயப் பிரதானன்
பிராட்டி - பத்ம பாணி (தாமரைக் கையாள்)
விமாநம் - சந்தோடச் சினகர விமாநம்
தீர்த்தம் - சக்கர தீர்த்தம் (சுதர்சன வாவி)
கோலம் - சயனத் திருக்கோலம்
சந்நிதி தெற்கு
பேறுபெற்றோார் - அம்பரீடன். பட்டாம்பி இரயில் நிலையத்தி லிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது.
குல சேகராழ்வார் - மங்களாசாசனம்

**70. திருக்கடித் தானம்**

எம்பெருமான் - அற்புத நாராயணன்
பிராட்டி - கற்பகவல்லி
விமாநம் - புண்ணிய கோடி விமாநம்
தீர்த்தம் - பூமி தீர்த்தம்
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - ருக்மாங்கத மன்னன்
நம்மாழ்வார் மங்களாசாசனம். அம்பலப் புழாவிலிந்து இருபத்து மூன்று கல் தொலைவில் உள்ளது. திருவல்லவாழ்வூருக்கு வடக்கே மூன்று கல்தொலைவு.

**71. திருவாறன் விளை.**

எம்பெருமான் - பாம்பணையப்பன் (சேஷாசனர்)
பிராட்டி - பத்மாஸனி
விமாநம் - வாமந விமாநம்
தீர்த்தம் - வியாச தீர்த்தம்
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - வடக்கு
பேறுபெற்றோர் - பிரமன், வேத வியாசர்

நம்மாழ்வார் - மங்களாசாசனம். கொட்டாரக்கராவிலிருந்து முப்பத்தேழுகல். திருச்செங்குன்றூரிலிருந்து கிழக்கே ஏழுகல்.

**72. திரு நாராயண புரம்**

எம்பெருமான் - செல்வ நம்பி, நாராயணன்

பிராட்டி - அழகிரி வல்லி

விமாநம் - கல்யாண விமாநம்

தீர்த்தம் - கல்யாண தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - தெற்கு

பேறுபெற்றோர் - கருடன். கண்ணனும் இராமனும் தரிசித்த தலம் ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெறாதது. ஆயினும் ஆழ்வார்கள் ஆசாரியர்களின் திருவவதாரம் முதலிய சம்பந்தங்களினால் சிறப்புப் பெற்ற தலங்களுள் ஒன்று. செல்வப் பிள்ளை தலங்களுள் ஒன்று. நாராயணாத்ரி, வேதாத்திரி, யாதவாத்ரி யதிசைலம் என்றும் மறு பெயர்களையுடைய புகழ் பெற்ற தலம்.

## நடுநாட்டுத் திருப்பதிகள்.

**73. திருவயிந்திரபுரம்**

எம்பெருமான் - தெய்வ நாயகன்

பிராட்டி - வைகுண்ட நாயகி

விமாநம் - சந்திர விமாநம்

தீர்த்தம் - கருட தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - இந்திரன், சிவன், மார்க்கண்டேயர், வியாக்கிர பாத முனிவர். இத்தலம் தென்னாற்காடு ஜில்லாவில் திருப்பாதிரிப் புலியூர் நிலையத்திற்கு மேற்கே மூன்று கல் தொலைவில் உள்ளது.

**74. திருக்கோவலூர்**

எம்பெருமான் - திருவிக்கிரமன், கோபாலன்

பிராட்டி - பூங்கோவல் நாச்சியார்

விமாநம் - சீகர விமாநம்

தீர்த்தம் - புங்கவாவி

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு. இத்தலத்திற்கு இடை கழி என்றும் பெயர் உண்டு
பேறு பெற்றோர் - முதலாழ்வார்கள் மிருகண்டு முனிவர். திருக்கோயிலூர் இரயில் நிலையத்திற்கு மேற்கே இரண்டு கல் தொலைவு

## தொண்டை நாட்டுத் திருப்பதிகள்

**75. திருக்கச்சி (அத்தியூர்)**

எம்பெருமான் - வரதராஜப் பெருமாள் சிங்கபிரான்
பிராட்டி - பெருந்தேவி, அரிதேவி
விமானம் - புண்ய கோடி விமானம்
தீர்த்தம் - அனந்த சரஸ்
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - மேற்கு
பேறுபெற்றோர் - பிரமன், கசேந்திரன், ஆதிசேஷன் பிருகு, நாரதர், திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் மங்களாசாசனம். காஞ்சிப்புரத்திலிருந்து இரண்டு கல் தொலைவு.

**76. அட்டபுயகரம்(காஞ்சிபுரம்)**

எம்பெருமான் - அட்டபுயகர சக்ரபாணி, கஜேந்திர வரதன்
பிராட்டி - அலர்மேல் மங்கை
விமானம் - வியோமாகார விமானம், ககனாக்ருத விமானம்
தீர்த்தம் - கஜேந்திர புட்கரணி
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - மேற்கு
பேறுபெற்றோர் - கஜேந்திரன். திருமங்கையாழ்வார், பேயாழ்வார் மங்களாசாசனம் காஞ்சிபுரத்திலிருந்து இரண்டு கல் தொலைவில் உள்ளது.

**77: திருவேளுக்கை**

எம்பெருமான் - ஆள் அழகிய சிங்கர், முகுந்த நாயகன்
பிராட்டி - அரவிந்தவல்லி
விமானம் - இரணிய விமானம்
தீர்த்தம் - கனகசரஸ்
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - சனகன், பிருகுமுனிவர், பேயாழ்வார், திருமங்கை யாழ்வார் - மங்களாசாசனம். காஞ்சிபுரத்திலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது.

**78. திருப் பாடகம்**

எம்பெருமான் - பாண்டவதூதர்

பிராட்டி - ருக்மிணி, சத்தியபாமை

விமாநம் - பத்ர விமாநம்

தீர்த்தம் - அரித்திரவாவி, மத்ஸய தீர்த்தம்

கோலம் - வீற்றிருக்கும் கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - கோகுல மாமுனிவர் ஹரித முனிவர்: காஞ்சி புரத்திலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது.

**79. திரு நீரகம்**

எம்பெருமான் - ஜகதீசப் பெருமாள்

பிராட்டி - நீரகவல்லி, நீலமங்கை வல்லி

விமாநம் - சூர்ய விமானம், ஜகதீசுவர விமாநம்

தீர்த்தம் - அக்ரூர தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - அக்ரூரர். காஞ்சிபுரத்திலிருந்து முக்கால் கல் தொலைவில் உள்ளது

**80. நிலாத்திங்கள் துண்டம்**

எம்பெருமான் - நிலாத்திங்கள் துண்டத்தான்

பிராட்டி - நேர் ஒருவரில்லாவல்லி

விமாநம் - சஞ்சனப் பேரிருப்பு விமாநம்

தீர்த்தம் - சந்திரபுட்கரணி

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - மேற்கு

பேறு பெற்றோர் - சிவபெருமான்

திருமங்கையாழ்வார் - மங்களாசாசனம். பெரிய காஞ்சீபுரம் ஏகாம்பர நாதர் கோயிலுக்குள் முதல் சுற்றில் உள்ளது.

**81. திரு ஊரகம் (காஞ்சீபுரம்)**

எம்பெருமான் - உலகளந்த பெருமாள் (திரிவிக்கிரமன்)
பிராட்டி - அமிர்த வல்லி
விமாநம் - சீகர விமாநம்
தீர்த்தம் - நாகதீர்த்தம்
கோலம் - நின்ற கோலம்
சந்நிதி - மேற்கு
பேறுபெற்றோர் - ஆதிசேஷன்
திருமழிசை யாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். காஞ்சீபுரத்திலிருந்து முக்கால் கல் தொலைவில் உள்ளது.

**82. திருவெஃகா (காஞ்சீபுரம்)**

எம்பெருமான் - சொன்ன வண்ணம் செய்த பெருமாள் (யதோத்காரி)
பிராட்டி - கோமளவல்லி, கச்சி இலக்குமி
விமாநம் - வேத சார விமாநம்
தீர்த்தம் - பொய்கை புட்சரணி
கோலம் - சயனத் திருக்கோலம்
சந்நிதி - மேற்கு
பேறு பெற்றோர் - பொய்கை யாழ்வார், கணிகண்ணன். பொய்கை யாழ்வார், பேயாழ்வார், திருமழிசையாழ்வார் நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் - மங்களாசாசனம். இத்தலம் காஞ்சீபுரத்திலிருந்து இரண்டு கல் தொலைவு.

**83. திருக்காரகம் (காஞ்சீபுரம்)**

எம்பெருமான் - கருணாகரப் பெருமான்
பிராட்டி - ரமாமணி,
விமாநம் - விசுத்த விமாநம்
தீர்த்தம் - ஞானத் தடம்
கோலம் - சயனத் திருக்கோலம்
பேறு பெற்றோர் - பிருகு முனிவர்
திருமங்கையாழ்வார் - மங்களாசாசனம். இத்தலம் காஞ்சீபுரத்திலிருந்து முக்கால் கல் தொலைவில் உள்ளது.

**84. திருக்கார் வானம்**

எம்பெருமான் - கள்வர் பெருமான்
பிராட்டி - கமல வல்லி
விமானம் - கருட விமானம்
தீர்த்தம் - கௌரி தீர்த்தம்
கோலம் - இருந்த கோலம்
சந்நிதி - வடக்கு
பேறுபெற்றோர் - பார்வதி
திருமங்கையாழ்வார் - மங்களாசாசனம். காஞ்சியிலிருந்து முக்கால் கல் தொலைவு.

**85. திருப்பவள வண்ணம்**

எம்பெருமான் - பவள வண்ணன்.
பிராட்டி - பவளவல்லி
விமானம் - அட்டாங்க விமானம்
தீர்த்தம் - புனித தீர்த்தம், சக்ர தீர்த்தம்
கோலம் - நின்ற திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - விண்ணோரும், முனிவரும், மற்றவரும். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். காஞ்சியிலிருந்து ஒரு கல் தொலைவில் உள்ளது.

**86. திருத்தண்கா**

எம்பெருமான் - தீபப்பிரகாசன், விளக்கொளி பெருமாள், திவ்யப் பிரகாசன்
பிராட்டி - மரகத வல்லி
விமானம் - பிரபை விமானம்
தீர்த்தம் - சரசுவதி தீர்த்தம்
கோலம் - நின்ற கோலம்
சந்நிதி - மேற்கு
பேறு பெற்றோர் - சரசுவதி
திருமங்கையாழ்வார் - மங்களாசாசனம். காஞ்சியிலிருந்து இரண்டு கல் தொலைவு.

**87. பரமேச்சுர விண்ணகரம்**

எம்பெருமான் - பரமபதநாதன்
பிராட்டி - வைகுந்தவல்லி
விமானம் - அட்டாங்க விமானம்
தீர்த்தம் - ஐரம்மதி
கோலம் - வீற்றிருந்த திருக்கோலம்
சந்நிதி - மேற்கு
பேறுபெற்றோர் - பல்லவவேந்தன். திருமங்கையாழ்வார் மங்களா சாசனம். இக்கோயிலில் பல்லவச் சிற்பங்களும், வரலாறுகளும் சுவர்களில் செதுக்கப்பட்டுள்ளன. மேல் தளத்தில் சயனத் திருக்கோலமும், அதற்கு மேல் நின்ற கோலமும் உள்ளன.

**88. திருப்புட்குழி**

எம்பெருமான் - விசயராகவர்
பிராட்டி - மரகதவல்லி
விமானம் - விஜயகோடி விமானம்
தீர்த்தம் - ஜடாயு தீர்த்தம்
கோலம் - வீற்றிருந்த திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - ஜடாயு
திருமங்கையாழ்வார் - மங்களாசாசனம்
காஞ்சியிலிருந்து 11 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது.

**89. திருஎவ்வுளூர், திருவள்ளூர்**

எம்பெருமான் - வீரராகவன்
பிராட்டி - செங்கமல வல்லி
விமானம் - விஜயகோடி விமானம்
தீர்த்தம் - ஹிருத்தாபநாச தீர்த்தம்
கோலம் - சயனத் திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோா - சாலிகோத்திர முனிவர். திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார் - மங்களாசாசனம். இத்தலத்திற்குப் பேருந்து மூலமாகவும், இரயில் மூலமாகவும் செல்லலாம். இப்பொழுது திருவள்ளூர் என்று வழங்கப்படுகிறது. திருவள்ளூர் இரயில் நிலையத்திலிருந்து 4 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

**90. திரு நின்றவூர்**

எம்பெருமான் - பக்தவச்சலப் பெருமாள்

பிராட்டி - என்னைப் பெற்ற தாயார்

விமாநம் - உத்பலாவதக விமாநம்

தீர்த்தம் - வருண தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் – வருணன், தருமசேனன். சென்னை அரக்கோணம் பாதையில் திண்ணனூர் இரயில் நிலையத்துக்குத் தெற்கே ஒன்றரைக் கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. சென்னையிலிருந்து பேருந்து மூலமாகவும் செல்லலாம். செங்கல்லும் சுண்ணாம்புமின்றி மனத்தினாலேயே சிவபெருமானுக்குக் கோயில் எழுப்பிய பூசலார் நாயனாரின் ஊர். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

**91. திருநீர்மலை**

எம்பெருமான் - பொன்மாணிக்கன், நீர்வண்ணன், அரங்கநாதன், நீலமுகில் வண்ணன்

பிராட்டி - கொத்தலர் மாமணிமாவிகை

விமாநம் - அரங்கமணி விமாநம், தோயகிரி விமாநம்

தீர்த்தம் - மணிகர்ணிகா தீர்த்தம்

கோலம் - சயனத் திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - தொண்டைமான், பிருகுமுனிவர், மார்க்கண்டேயர். இத்தலம் பல்லாவரத்திலிருந்து $4^1/_2$ கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

பூதத்தாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்.

திருமலை அத்தங்கி தாதாரியர் தொண்டர் என்ற நூலாசிரியர் தாம் பாடிய 108 திருப்பதி அந்தாதியில் சயனத் திருக்கோலம், திருமுக மண்டலம் என்று பாடியுள்ளார். ஆய்வுக்குரியது.

**92. திருவிடவெந்தை**

எம்பெருமான் - நித்ய கல்யாணர்

பிராட்டி - கோமளவல்லி

விமாநம் - கல்யாண விமாநம்

தீர்த்தம் - வராக தீர்த்தம் ,கல்யாண தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - மார்க்கண்டேயர்

திருமங்கையாழ்வார் - மங்களாசாசனம். பெருமாள் தமது தேவியை இடப்பக்கத்தில் கொண்டிருத்தலால், திருவிட வெந்தை என்று பெயராயிற்று. வண்டலூரிலிருந்து 40 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

**93. திருக்கடல் மல்லை (மகாபலிபுரம்)**

எம்பெருமான் - தலசயனப் பெருமாள்

பிராட்டி - புண்டரீக வல்லி

விமானம் - புண்டரீக விமானம்

தீர்த்தம் - புண்டரீக தீர்த்தம்

கோலம் - சயனத் திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - புண்டரீக முனிவர், பூதத்தாழ்வார். பூதத்தாழ்வாரின் அவதாரத்தலம். திருமங்கையாழ்வார், பூதத்தாழ்வார் மங்களாசாசனம். சென்னையிலிருந்து கடலோரப் பேருந்து வழியில் 38 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது..

**94. திருவல்லிக்கேணி**

எம்பெருமான் - பார்த்த சாரதி

பிராட்டி - வேதவல்லித் தாயார்

விமானம் - பாஸ்கர விமானம் ,

தீர்த்தம் - கயிரவ தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - அர்ச்சுனன், தொண்டைமான். திருமழிசையாழ்வார், திருமங்கையாழ்வார், பேயாழ்வார் மங்களாசாசனம்.

**95. திருக்கடிகை**

எம்பெருமான் - அக்காரக்கனிப்பெருமாள் யோக நரசிம்மன்

பிராட்டி - அமுதவல்லி

விமானம் - அட்டாங்க விமானம்

தீர்த்தம் - அமுத தீர்த்தம்

கோலம் - வீற்றிருந்த கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - சப்த ரிஷிகள், அநுமான், பேயாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். அரக்கோணம் காட்பாடி இரயில் பாதையில் சோளிங்கர் நிலையத்திலிருந்து 12 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. பேருந்து வழியாகவும் செல்லலாம்.

## வட நாட்டுத் திருப்பதிகள் 12

**96. வடவேங்கடம்**

எம்பெருமான் - திருவேங்கடமுடையான் (ஸ்ரீநிவாசன்)

பிராட்டி - அலர்மேல் மங்கைத்தாயார்

விமானம் - ஆனந்த நிலைய விமானம்

தீர்த்தம் - சுவாமி புஷ்கரணி,வராகத் தடம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - முருகன், தொண்டைமான். பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகரர், திருமழிசையாழ்வார், திருப்பாணாழ்வார் திருமங்கையாழ்வார் மங்களாசாசனம்

ரேணுகுண்டா காட்பாடி வழியில் ரேணுகுண்டாவிலிருந்து ஒன்பது கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. சென்னையிலிருந்து பேருந்து மூலமாகவும் செல்லலாம்.

**97. சிங்கவேள் குன்றம்: இது அஹோபிலம் என்று வழங்கப்படும்.**

எம்பெருமான் - சுவால நரசிம்மன் பிரகலாத வரதன்

பிராட்டி - அழகிய வல்லி

விமானம் - ககன விமானம்

தீர்த்தம் - சோணிதவாவி. நரசிங்கத் தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - பிரகலாதன்

திருமங்கையாழ்வார் - மங்களாசாசனம்

நந்தியால் இரயில் நிலையத்திலிருந்து ஐம்பத்தாறு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

**98. திரு அயோத்தி**

எம்பெருமான் - பட்டாபிராமன், சக்கரவர்த்தி திருமகன்

பிராட்டி - சீதாபிராட்டி

விமானம் - புஷ்பக விமானம்

தீர்த்தம் - சரயு, யமுனை,

கோலம் - வீற்றிருக்கும் கோலம்

சந்நிதி - வடக்கு

பேறுபெற்றோர் - எல்லாத் தேவர்களும், பரதனும். பெரியாழ்வார், குலசேகராழ்வார், தொண்டரடிப்பொடி, திருமங்கையாழ்வார், மங்களாசாசனம். இத்திருப்பதி வடநாட்டில் பைசாபாத் நகரிலிருந்து ஐந்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. இராமபிரானது அவதாரத்தலம். முத்தியைக் கொடுக்கும் நகர் ஏழனுள் ஒன்று.

**99. நைமிசாரண்யம்**

எம்பெருமான் - நாராயணன்

பிராட்டி - ஸ்ரீஹரிலக்ஷ்மி

விமானம் - ஸ்ரீஹரிலக்ஷ்மி

தீர்த்தம் - திவ்ய விக்ராந்த தீர்த்தம்

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - சவுனகர், இந்திரன். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். நிம்சார் என்னும் இரயில் நிலையத்திலிருந்து ஒன்றரை கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.
இங்கு ஆரண்யத்தையே கடவுளாக வழிபடுகின்றனர். சூதமா முனிவர் பதினெண் புராண படனம் செய்த இடம்.

**100. சாளக்கிராமம்**

எம்பெருமான் - திரிமூர்த்தி

பிராட்டி - ஸ்ரீதேவி

விமானம் - ககன விமானம்

தீர்த்தம் - சக்ர தீர்த்தம்

கோலம் - நின்ற கோலம்

சந்நிதி - வடக்கு

பேறுபெற்றோர் - அரன், கண்டகி நதி, பிரமன்

பெரியாழ்வார், திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். நேப்பாள இராச்சியத்தின் தலைநகராகிய காட்மாண்டுவிலிருந்து நூற்றிருபது கிலோ மீட்டர் தொலைவில் அடர்ந்த காட்டினிடையில் உள்ளது.

**101. வதரியாச்சிரமம் (பதரிகாச்ரமம்)**

எம்பெருமான் - பதரீநாராயணன்

பிராட்டி - கயல் அம்கண் இதயமாது. (மீன் போன்று பிறழும் அழகிய கண்களையுடைய திருமால் இதயத்தில் இருக்கும் இலக்குமி)

விமானம் - வதரி விமானம்

தீர்த்தம் - தத்துவ வாவி

கோலம் - வீற்றிருந்த திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - பெரியாழ்வார். திருமங்கையாழ்வார் மங்களாசாசனம். ஹரித்துவாரத்திலிருந்து 275 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

**102. திருக்கங்கைக்கரை கண்டம் (தேவப்ரயாகை)**

இதைத் திருக்கண்டங்கடி நகர் என்பர்.

எம்பெருமான் - நாரசிங்கப்பெருமாள்

பிராட்டி - புண்டரீக வல்லி

விமானம் - மங்கல விமானம்

தீர்த்தம் - மங்கள புட்கரிணி

கோலம் - நின்ற திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - பரத்துவாச முனிவர்

இத்தலம் ஹரித்துவாரத்திலிருந்து எழுபத்தைந்து கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. பெரியாழ்வார் - மங்களாசாசனம்

**103. திருப்பிருதி (நந்தப் பிரயாகை)**

எம்பெருமான் - பரமபுருஷன்

பிராட்டி - பரிமளவல்லி

விமானம் - நந்தன வர்த்தன விமானம்

தீர்த்தம் - மானஸ சரஸ்

கோலம் - சயனத்திருக்கோலம்

சந்நிதி - தெற்கு

பேறுபெற்றோர் - பார்வதி

திருமங்கையாழ்வார் - மங்களாசாசனம் ஹரித்துவாரத்திலிருந்து இருநூற்றேழு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

**104. வடமதுரை**

எம்பெருமான் - கேசவன்

பிராட்டி - இரமாமணிவல்லி

விமாநம் - வைணவ விமாநம்

தீர்த்தம் - துருவ்த் தடம்

கோலம் - உட்கார்ந்த திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பேறுபெற்றோர் - துருவன், வசுதேவன், தேவகி
பெரியாழ்வார், ஆண்டாள் திருமங்கையாழ்வார் நம்மாழ்வார், தொண்டரடிப்பொடியாழ்வார் - மங்களாசாசனம்.
மத்ரா இரயில் நிலையத்திலிருந்து 3 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

**105. துவாரகை**

எம்பெருமான் - கலியாண நாராயணன்

பிராட்டி - அட்டமகிஷிகள்

விமாநம் - ஏமகூட விமாநம்

தீர்த்தம் - கோமதி தீர்த்தம்

கோலம் - இருந்த திருக்கோலம்

சந்நிதி - மேற்கு

பேறுபெற்றோர் - திரௌபதி. பெரியாழ்வார், ஆண்டாள், திருமங்கையாழ்வார் திருமழிசையாழ்வார், நம்மாழ்வார் மங்களாசாசனம்.
(அட்ட மகிஷிகள் ருக்குமிணி, சத்தியபாமை, இலக்கணை சாம்பவதி, காளிந்தி, மித்திர விந்தை, சக்தியை, பத்ரை) சக்தியை : நப்பின்னைப்பிராட்டியார், துவாரகா இரயில் நிலையத்திலிருந்து ஒன்றரைக்கல் தொலைவில் உள்ளது. பம்பாயிலிருந்து ஜாம் நகர் வழியாகச் செல்லவேண்டும்.

**106. விருந்தாவனம் (பிருந்தாவனம்)**

இத்தலமும், கோவர்த்தனமும் திவ்ய தேசக் கணக்கில் சேர்க்கப்படவில்லை. இதை வட மதுரையைச் சார்ந்த திருப்பதியாகவே கொண்டுள்ளனர்.

எம்பெருமான் - ராதா வல்லபப் பெருமான்

பிராட்டி - இராதாதேவி

விமாநம் - பூபோதல இருப்பு

தீர்த்தம் - கோபியரின் துகில் கவர்ந்த பொய்கை

கோலம் - இருக்கும் திருக்கோலம்

சந்நிதி - கிழக்கு

பிராட்டி - இராதாதேவி
விமாநம் - பூபோதல இருப்பு
தீர்த்தம் - கோபியரின் துகில் கவர்ந்த பொய்கை
கோலம் - இருக்கும் திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - அயன், அரன் ஆண்டாள் மங்களாசாசனம்.

**107. கோவர்த்தனகிரி: இதுவும் 108 திவ்ய தேசக் கணக்கில் இல்லை வடமதுரையில் அடங்கிய தலம்**

எம்பெருமான் - கோவர்த்தனதாரி.
பிராட்டி - நப்பின்னைப் பிராட்டியார்
விமாநம் - பர்வத விமாநம்
தீர்த்தம் - ராதைத் தடம்
கோலம் - நின்ற கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - இந்திரன், யாதவர்கள். பெரியாழ்வார் மங்களாசாசனம்

**108. திருவாய்ப்பாடி (கோகுலம்)**

எம்பெருமான் - திருவாய்ப்பாடிக் கண்ணன்
பிராட்டி - ராதை.
விமாநம் - ஏமகூட விமாநம்
தீர்த்தம் - யமுனையில் காளியத்தடம்.
கோலம் - இருந்த திருக்கோலம்
சந்நிதி - கிழக்கு
பேறுபெற்றோர் - சனக சனந்தராகிய நால்வர், நந்த கோபாலன் திருமங்கையாழ்வார் ஆண்டாள் மங்களாசாசனம்
வடமதுரைக்குக் கிழக்கே ஆறு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

| | |
|---|---|
| சோழ மண்டலத் திருப்பதிகள் | 40 |
| பாண்டி மண்டலத் திருப்பதிகள் | 18 |
| மலை நாட்டுத் திருப்பதிகள் | 14 |
| நடுநாட்டுத் திருப்பதிகள் | 2 |
| தொண்டை நாட்டுத் திருப்பதிகள் | 22 |
| வடநாட்டுத் திருப்பதிகள் | 12 |
| | 108 |

